நாட்டரசன் கோட்டை
தீர்த்தார் குளம்
அருள்மிகு

# தேச்கவிநாயகர்கோயில்

திருக்குட நன்னீராட்டு விழா

# மலர்





1.5.1989

63-1 (2)

உ
சிவமயம்



# நாட்டரசன்கோட்டை தீர்த்தார்குளம்

# அருள்மிகு
# தேசிக விநாயகர் கோயில்

## திருக்குட நன்னீராட்டு விழாச்
## சிறப்புமலர்

மலர்க்குழுத் தலைவர்

**வீர. சுப. லெ. கண்ணப்ப செட்டியார்**

இதழாசிரியர்

**பேராசிரியர் இராம. சிவசுப்பிரமணியன்**

மலர்க்குழுச் செயலர்

**வெ. இராமசாமி**

வெளியீடு

தூரக்குடி நகரத்தார்
தீர்த்தார்குளம் தேசிக விநாயகர் கோயில்




உ

சிவமயம்

அருள்மிகு தேசிக விநாயகர் துணை

நாட்டரசன் கோட்டை, தீர்த்தார் குளம்

அருள்மிகு தேசிக விநாயகர் கோயில்

திருக்குட நன்னீராட்டு விழா

சுக்கில ஆண்டு சித்திரைத் திங்கள் 18 ஆம் நாள்

1-5-1989 திங்கட்கிழமை காலை 7-7-30 மணிக்கு

நிகழ்ந்தது.

சூரக்குடி நகரத்தார்,

தீர்த்தார் குளம், தேசிக விநாயகர்கோயில்

# யாகசாலைக்கு பூரணாகுதி
# எடுத்துச்செல்லும் காட்சி





## 1—5—89 ல் நடைபெற்ற

# திருக்குட நன்னீராட்டு விழா காட்சிகள்





# அருள்மிகு தீர்த்தார்குளம் தேசிக விநாயகர்



சந்தனக்காப்பு அலங்காரம்



வெள்ளி மூஷிக வாகனத்தில்

# அருள்மிகு தேசிகவிநாயகர் கோயில் திருப்பணிக் குழு



பெரி. அரு. கண.
கணபதி செட்டியார்



வீர. சுப லெ
இராமநாதன் செட்டியார்



பெரி. அரு. கண. இராமசாமி செட்டியார்



வீர. ஆ. இராம.
சிவசுப்பிரமணியன்



வீர. மு. வீர. இராம
அருணகிரி



வீர. சிவ. கி.
சிவசுப்பிரமணியன்



ரா. கண. நா. கண.
ராக்கப்பன்



வீர. மு. வீர. இராம. அண்ணுமலை செட்டியார்



வீர. ஆறு. நா.
நாராயணன் செட்டியார்



வீர. மு. வீர, கண
முத்துவீரப்ப செட்டியார்

## மலர்க் குழு



வீர. ஆ. இராம. வெ.
இராமசாமி செட்டியார்



கண. திரு சுப
சுப்பிரமணியன் செட்டியார்



வீர. சுப. லெ. கண்ணப்ப செட்டியார்



பெரி. அரு. கண.
சீனிவாசன் செட்டியார்



வீர. மு. வீர. இராம. அரு:
இராமகிருஷ்ணன்

# திருக்குட நன்னீராட்டு விழாக் குழுவினர்

| | | |
|---|---|---|
| பெரி.அரு.கண. இராமசாமி செட்டியார் | — | ஆலோசகர் |
| பெரி.அரு.கண. கணபதி செட்டியார் | — | தலைவர் |
| வீர.சுப.லெ. இராமநாதன் செட்டியார் | — | துணைத்தலைவர் |
| வீர.ஆ.இராம. சிவசுப்பிரமணியன் | — | செயலர் |
| வீர.மு.வீர.இராம. அருணகிரி | — | துணைச்செயலர் |
| வீர.சிவ.கி. சிவசுப்பிரமணியன் | — | இணைச் செயலர் |
| ரா.கண.நா.கண. ராக்கப்பன் | — | பொருளாளர் |
| வீர.மு.வீர.இராம. அண்ணாமலை செட்டியார் | — | துணைப் பொருளாளர் |
| வீர.ஆறு நா. நாராயணன் செட்டியார் | — | திருப்பணிக்குழு உறுப்பினர் |
| வீ.மு.வீர.கண. முத்துவீரப்ப செட்டியார் | — | திருப்பணிக்குழு உறுப்பினர் |

## மலர்க்குழு

| | | |
|---|---|---|
| வீர.சுப.லெ. கண்ணப்ப செட்டியார் | — | தலைவர் |
| வீர.ஆ.இராம.வெ. இராமசாமி செட்டியார் | — | செயலர் |
| பெரி.அரு.கண. சீனிவாசன் செட்டியார் | — | உறுப்பினர் |
| வீர,மு.வீர.இராம.அரு. இராமகிருஷ்ணன் | — | ,, |
| கண.திரு.சுப. சுப்பிரமணியன் செட்டியார் | — | ,, |



# இதழாசிரியர் முன்னுரை

தென்பனசை என வழங்கும் நாட்டரசன் கோட்டை செட்டிநாட்டில் தெற்கு வட்டகையில் தலைமை சான்ற பேரூராகும். இந்நகர்க்குச் சிறப்புத் தருவன இங்கே அமைந்த ஆலயங்கள் ஆகும். கண்ணுடையம்மன் திருக்கோயிலும், கரிகால சோழீசர் திருக்கோயிலும், வேங்கடேச பெருமான் திருக்கோயிலும், தேசிக விநாயகர் திருக்கோயிலும் இந்நகரின் மிகப்பழமை சான்ற ஆலயங்களாகும். இவை பழமை சான்றன என்பதற்கு அகச் சான்ருக அமைந்து விளங்குவது இந்நகர்க்குரிய 'கண்ணுடையம்மன் பள்' என்னும் இலக்கியமாகும். இந்நூலை இயற்றியவர் இவ்வூரில் கி. பி. 1775இல் வாழ்ந்த முத்துநாயகம் என்னும் முத்துக்குட்டிப் புலவர் ஆவார். இவர் கண்ணுடையம்மன் பள்ளிசை பாடக் காரணமாக இருந்த விநாயகர் மூவர் என அந்நூலின் முதற் செய்யுளில் குறிப்பிடுகிருர். ''அருள்சேர் மகமாயி சந்நிதி-தனில் அபிஷேக விநாயகர், திரு அரசடி வாழ்வாய் வரும் ஆதி விநாயகர், வடதிசை வளர் தேசிக விநாயகர் இவருடன் வரும் மூவர் விநாயகர் துணையென மகிழ்வேனே'' என்பது அவரது பாடல். இதனுல் இவ்விநாயக பெருமான் தொன்மையைத் தெளிவாக உணரலாம்.

இவ்விநாயகர் தோற்றமுற்ற வரலாறு நினைவுகூரத் தக்கது. இந்நகரில் வாழ்ந்த சூரக்குடி நகரத்தார்களால் இவ்வாலயம் மிகப் பழங்காலத்தே தோற்றுவிக்கப்பெற்றது. இதன் தோற்றம் வரலாற்றுச் சிறப்புடையது. இந் நகர்ச் சூரக்குடி நகரத்தார் ஒருவர் திருமணத்திற்குச் சூரக்குடி நகரக் கோயிலிலிருந்து ஏதோ காரணத்தால் மணமாலை (கோயில் மாலை) வரச் சுணங்கியது. மணவிழாவிற்கு மணமாலை சுணக்கம் ஒரு காரணமாக அமைதல் கூடாது என்று எண்ணிய எம்முன்னேர் சூரக்குடிப் பாணியில் ஒரு திருக்கோயிலும், ஒரு திருக்குளமும் அமைத்தனர். திருக்கோயிலில் விநாயகரைப் பிரதிட்டை செய்தனர். சூரக்குடியில் கோயில் கொண்டுள்ள இறைவன் தேசிகநாதர் ஆவார். அங்கே அக்கோயிலின் முன்பாக அமைந்துள்ள குளம் தீர்த்தார் குளம் ஆகும். அப்பெயர்களையே நினைவுகூரும் வகையில் தாம் பிரதிட்டை செய்த விநாயகரைத் தேசிக விநாயகர் என்றனர். திருக்குளத்தை அதே பெயரால் தீர்த்தார்குளம் என்றே பெயரிட்டு அழைத்தனர். இங்கே இத்தனை ஏற்பாடுகளும் செய்து கோயில்மாலையை வரவழைக்கும் தறுவாயில், நகரச் சூரக்குடி நிர்வாகத்தினர் எம் முன்னேர்தம் முற்போக்கு முயற்சிகளைக் கண்டு, கோயில்மாலை அனுப்பி விட்டனர். அடுத்து முயன்ருல் ஆகாதது ஒன்றுண்டோ? எம் முன்னேர் எடுத்த வெற்றி சின்னத்தின் அடையாளமே இப்புகழ் மிகுந்த ஆலயம் என்பது இவ்வரலாற்ருல் இனிது விளங்கும்.

இவ்வாலயம் பன்னெடுங் காலமாகச் சூரக்குடி நகரத்தார்களான ஆண்டப்ப செட்டிவகை,

வேலப்ப செட்டிவகை, திருகப்ப செட்டிவ்கை, இராக்கப்ப செட்டிவகை என்னும் நான்கு வகையினரால் செம்மையாக நிர்வாகம் செய்யப் பட்டு வந்தது. திருகப்ப செட்டிவகையைச் சார்ந்த சத்திரம் கண்ணப்ப செட்டியார் அவர்கள் சென்ற 56 ஆண்டுகளாக இக்கோயிலே நிர்வாகம் செய்துவந்த திறத்தை நாங்கள் நன்றிக்கடனுடன் பாராட்டுகிருேம். அவர்கட்-குப்பின் அவர்கள் மக்கள் சூரக்குடிப் பங்காளி-களிடம் வேண்டிக் கொண்டதன் பேரில் பங்காளி கள் எல்லாரும் ஒருசேரப் பொறுப்பேற்று, இக்கோயிலே நான்கு வகையினரும் ஒவ்வோர் ஆண்டு கண்காணித்து வருவதென்றும், அதற்கு முன்னேடியாகத் திருக்குடநன்னீராட்டு விழாவினே நிகழ்த்தித் திருக்கோயிலேப் புதிய பொலிவும் வலுவும் உடையதாக ஆக்குவ-தென்றும் எண்ணினேம். அவ்வெண்ணம் தேசிக விநாயகர் திருவருளால் மிகச் சிறப்பாகச் செயல்பெற்றது. முன்னேயச் சுக்கில ஆண்டில் திருக்குட நன்னீராட்டு நிகழ்ந்ததாக எங்கள் பெரியவர்கள் கூறுகிருர்கள். அத்திருக்குட நன்னீராட்டு விழாவில் பங்குகொண்ட தெ.மு. சோமசுந்தரக் குருக்கள் என்ற இராசா-ம்ணிக் குருக்கள் தலேமையில் இப்பொழுது இத்திருக்குட நன்னீராட்டு விழா நிகழ்ந்தது குறிப்பிடத்தக்கது. அறுபது ஆண்டுகட்குப் பின்பு, இதுபோது இத்திருக்குட நன்னீராட்டு விழா 1-5-1989இல் அதே சுக்கில ஆண்டில் நிகழ்ந்திருக்கிறது. இவ்விநாயகர் துணேயால் பள்ளிசைப் பாட்டினேப் பெற்று விளங்கும் அருள்தரு கண்னுடையம்மனுக்கும், இவ் விநாயகப் பெருமானுக்கும் ஒரே நாளில் ஒரு சேரத் திருக்குட நன்னீராட்டு விழாக்கள் நிகழ்ந்தமை குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். விநாயகர்க்கு முன்னும் அம்மைக்கு அதனே அடுத்தும் திருக்குட நன்னீராட்டு நிகழ்ந்தமை கண்கொள்ளாக் காட்சி ஆகும்.

இப்போது இத்திருக்கோயில் திருப்-பணியைச் செம்மையாகச் செய்து, எங்கட்கு ஆக்கமும் ஊக்கமும் ஊட்டிய எங்கள் பெரியவர் வீர. ஆறு. நா. நாராயணன் செட்டியார் அவர்களே நாங்கள் மனமாரப் பாராட்டி மகிழ்கிருேம். மற்றும் இத்திருப்பணியில் கடமை உணர்வோடு செயல்பட்ட அத்தனேப் பேருக்கும் திருப்பணிக் குழுவின் செயலர் என்ற முறையில் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருக்குட நன்னீராட்டு விழாவினே முன்னிட்டு வெளிவரும் இத்தெய்வ மணங் கமழும் மலருக்கு விளம்பரங்கள் நல்கி உதவிய அத்தனேப் பெருமக்கட்கும் இதழாசிரியர் என்ற முறையில் எனது நன்றி கலந்த வணக்கத்தைப் புலப்படுத்திக் கொள்கிறேன். மற்றும் நன்-கொடை நல்கிய அனேவர்க்கும் எமது இதயங் கனிந்த நன்றியை இயம்பிக் கொள்கின்றேன். மலர் சிறப்புற்று விளங்கக் கவிதை, கட்டுரை, கதை என இன்னபிற இலக்கியப் படைப்புக்-களேத் தந்துதவிய அன்பர்கள் அனேவர்க்கும் நன்றிக் கடப்பாடு உடையேன். மலரைச் சிறப்புற அச்சிட்டுத் தந்து உதவிய மதுரை ஓரியண்ட் அச்சகத்தார்க்கு எங்கள் சிறப்பான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இன்னும் உடலாலும், உள்ளத்தாலும், உறு பொருளாலும் உதவிய அத்தனேப் பெருமக்கட்-கும் எங்கள் தேசிக விநாயகர் திருவருள் புரிவாராகுக.

இம்மலரைக் கைமணக்கப் பெற்று, நெஞ்சம் இனிக்க நினேந்து, வாய் கமழ வாசித்து இதன் பயனேத் துய்ப்பார் அனேவரும் தேசிக விநாயகர் திருவருளால் நன்மைகள் பல பெற்று நல்வாழ்வு அடைவார்களாகுக.

பேராசிரியர்
**இராம. சிவசுப்பிரமணியன்**
தமிழ்த்துறை, ஸ்ரீ சேவு.அ. கல்லூரி,
தேவகோட்டை பிரிவு, 623 303.

# சூரக்குடி பங்காளிகள்

## திருகப்ப செட்டியார் வகை

1) கண. திரு. சுப. (பனங்குடி)
2) வ. கண. பெரி.
3) பெரி. அரு. கண.
4) பெரி. அரு. கண. ராம.
5) பெரி. அரு. கண. ராம. மு.
6) பெரி. அரு. கண. கண.
7) பெரி. அரு. கண. சீ.
8) பெரி. அரு. கண. அண.
9) பெரி. அரு. கண. செ.
10) கண. வே. சாத.
11) கண. வே. சாத. ராம.
12) கண. வே. சாத. ராம. வயி.
13) கண. வே. சாத. ராம. வே.
14) கண. மு. பெரி. வீர. ராம. (நடராஜபுரம்)
15) கண. மு. பெரி. வீர. ராம. ச ( ,, )
16) கண. மு. பெரி. வீர. லெ. ( ,, )
17) கண. பெரி. வெ. சிகரு. (பனங்குடி)
18) கண. பெரி. வெ. சிகரு. சே.

## ஆண்டப்ப செட்டியார் வகை

19) வீர. ஆ. ராம. வீர.
20) வீர. ஆ. ராம. வீர. வீர.
21) வீர. ஆ. ராம. வெ.
22) வீர. ஆ. ராம. வெ. ராம.
23) வீர. ஆ. ராம. வெ. கண.
24) வீர. ஆ. ராம. வெ. முரு.
25) வீர. ஆ. ராம. வெ. மா.
26) வீர. ஆ. ராம. சிவ.
27) வீர. ஆ. ச.
28) வீர. சுப. லெ. ராம.
29) வீர. சுப. லெ. ராம. சி.
30) வீர. சுப. லெ. ராம. ச.
31) வீர. சுப. லெ. கண.
32) வீர. சுப. லெ. கண. வீர.
33) வீர. சுப. லெ. கண. முரு.
34) வீர. சுப. லெ. வீர.
35) வீர. ஆரு. நா.
36) வீர. ஆரு. நா. லெ.
37) வீர. கதி. வீர.
38) வீர. கதி. வீர. மா.
39) வீர. கதி. வீர. க.
40) வீர. கதி. வீர. ந.
41) வீர. சிவ. கி.
42) வீர. சிவ. கி. சிவ.
43) வீர. குழ. சுப.
44) வீர. குழ. சுப. வீர.
45) வீர. குழ. லெ.
46) வீர. ச. நா. வீர.
47) வீர. ச. நா. ராம.
48) ஆ. அ. பழ. கண. வீர. கண.

## வேலப்ப செட்டியார் வகை

49) வீர. மு. வீர. ராம. அண.
50) வீர. மு. வீர. ராம. அண. க.
51) வீர. மு. வீர. ராம. அண. ரா.
52) வீர. மு. வீர. ராம. அண. மோ.
53) வீர. மு. வீர. ராம. அரு.
54) வீர. மு. வீர. ராம. அரு. ராம.
55) வீர. மு. வீர. ராம. மு.
56) வீர. மு. வீர. ராம. மு. ரா.
57) வீர. கண. ராம.
58) வீர. வீ. சே.
59) வெல. கண. நா. சிவ.
60) வெ. வெ. சோம.
61) வெ. வெ. சோம. வே.
62) வெ. வெ. சோம. நா.

## ராக்கப்ப செட்டியார் வகை

63) ரா. கண. சுப. கண. ச.
64) ரா. கண. சுப. கண. சோம.
65) ரா. கண. சுப. கண. சந.
66) ரா. கண. க. கண.
67) ரா. கண. க. கண. ரா.
68) ரா. கண. நா. கண.
69) ரா. கண. நா. கண. ரா.

# சத்திரம் கண. இராமசாமி செட்டியார் உரை

அருள்மிகு கண்ணுடையநாயகி அம்மன் ஆலய தக்கார்

நகரத்தார்களால் மட்டுமே தனிப் பெரும் விழாவாக 21 நாட்கள் விரதம் இருந்து கொண்டாடப்படும் ''பிள்ளையார் நோன்பு'' அன்று ''இழை எடுந்துக் கொள்வதற்கு முன்னர், நாட்டரசன் கோட்டை வாழ் நகரத்தார் பெருமக்கள் அனைவரும் ஒன்றுகூடி ''பூக்கட்டி'' அன்று மாலை வழிபடும் பெருமையைப் பெற்றது ஊரின் வடதிசையில் தீர்த்தார் குளத்தின் மேற்குக் கரையில் கோயில் கொண்டிருக்கும் தேசிக விநாயகர் சன்னதி.

இத்திருக்கோயில் சூரக்குடி நகரத்தார்களுக்குஉரிமைஉடையது கடந்த 56 ஆண்டுகளாக இக்கோயில் நிர்வாகத்தை ஏற்று நடத்திய என் தந்தையார் சத்திரம் திரு.பெரி.அரு.கண. கண்ணப்பசெட்டியார் அவர்கள், ஊரில் இருக்கும் நாட்களில் தேசிக விநாயகரின் மாலை நேர வழிபாட்டில் கலந்து கொள்வதை ஒரு கடமையாகக் கொண்டிருந்த பக்தியில் விளைந்த புண்ணியம்தான், மூன்றுண்டுகளுக்கு முன்னர் சிவகங்கை சமஸ்தான தேவஸ்தானம் என்னை அருள்மிகு கண்ணுடையநாயகி அம்மன் கோயிலுக்கு தக்காராக நியமித்து இறைப்பணியில் முழுமையாக ஈடுபடும் இன்பநிலையை எனக்கு ஏற்படுத்திக் கொடுத்தது என்றே எண்ணுகிறேன். மேலும் 60 ஆண்டுகளுக்கு முன்னர் கும்பாபிஷேகம் நடந்த கண்ணுடையநாயகி அம்மன் கோயிலுக்கும் ஒரே நாளில் 1-5-89 அன்றுநடைபெற்றகும்பாபிஷேகப் பெருவிழாவில் முழுமையாக தொண்டாற்ற எனக்கு தக்கார் என்ற நிலையைத் தந்த தேவஸ்தானத்தினருக்கும், நகரத்தார்க்கும் நன்றியுடையவனாவேன்.

ஒரே நாளில் இரண்டு கும்பாபிஷேகங்களையும் கண்டு தரிசித்த மக்கள் பெற்ற இன்பமே நான் பெற்ற இன்பம் என்று எண்ணி மகிழ்கிறேன்.

தொடர்ந்து இறைப்பணியில் ஈடுபட்டுத் தொண்டாற்றத் தேசிக விநாயகரும், ஸ்ரீ கண்ணுடைய நாயகியும் திருவருள்புரியப் பிரார்த்திக்கிறேன்.



# நன்றியுரை

நாட்டரசன்கோட்டை தீர்த்தார்குளம் தேசிக விநாயகர் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா மலர் மிகச் சிறப்பாக வெளிவருவது குறித்து மெத்த மகிழ்ச்சி அடைகிறேன். இம்மலர் வெளிவரத் துணைபுரிந்த இதழாசிரியர், என் அருமைத் தம்பி பேராசிரியர் இராம. சிவசுப்பிரமணியன் அவர்கட்கும், மலர்க்குழுவின் செயலர் அன்புத் தம்பி வெ. இராமசாமி அவர்கட்கும் என் நெஞ்சார்ந்த நன்றி உரித்தாகுக. மற்றும் மலர்க்கு விளம்பரங்கள் தந்துதவி எங்கட்கு ஆக்கமும் ஊக்கமும் தந்துதவிய பெருமக்கட்கு என் சிறப்பான நன்றியைப் புலப்படுத்திக் கொள்கிறேன். இலக்கியப் படைப்புக்களைக் கொடுத்து மலரை மணம் பெறச் செய்த அன்பர்கட்கு அகங்குழைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். மலரைச் சிறந்த முறையில் கவினுற அச்சிட்டுத் தந்து உதவிய ஓரியண்ட் அச்சக உரிமையாளர் என் அருமை மாப்பிள்ளை ஆத. சொக்கலிங்கம் அவர்கட்கு மலர்க்குழுவின் சார்பில் என் இதயம் கனிந்த நன்றியைக் கூறுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன். மற்றும் இயன்ற வகையில் எல்லாம் உதவி புரிந்த மலர்க்குழுப் பெருமக்கட்கும், திருக்குட நன்னீராட்டு விழாக் குழுவினர்க்கும், நகரத்தார் பெருமக்கட்கும் மலர்க்குழுவின் தலைவர் என்ற முறையில் எனது நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.



வீர. சுப. லெ. கண்ணப்ப செட்டியார்

மலர்க்குழுத் தலைவர்.

உ
சிவமயம்

திருக்கயிலாய பரம்பரை
ஸ்ரீ-ல-ஸ்ரீ
சிவப்பிரகாசதேசிகபரமாசாரிய
சுவாமிகள்
குருமகாசந்நிதானம்
திருவாவடுதுறை ஆதீனம்



திருவாவடுதுறை-609803
( தஞ்சாவூர் மாவட்டம் )

நாள் : 19—4—89

## ஆசியுரை

திக்கெல்லாம் புகழ்மணம் பரப்பும் தென் பனசை என வழங்கும் நாட்டரசன்கோட்டை அருள்மிகு தேசிக விநாயகர் கோயில் திருக் குடமுழுக்கு நன்னீராட்டுப் பெருவிழா அழைப்பிதழ் வரப்பெற்றோம். மகிழ்ச்சி.

தீர்த்தார்குளம் தேசிக விநாயகர் கோயில் சூரக்குடி நகரத்தார் பலருடைய சீரிய நன் முயற்சியினால் கோயில் திருப்பணிகள் முழுமையாக நிறைவெய்தி நடைபெறும் திருக்குடமுழுக்கு நன்னீராட்டுப் பெருவிழா பல்லாற்றானும் சிறப்புற நிகழவும், இப்பெரும் திருப்பணியில் அன்புடன் பங்கு கொண்டு வழிபடும் அன்பர்கள் நலன்களெல்லாமெய்தி மேன்மை பெறவும், சிறப்புமலர் தெய்வமணம் கமழ மலர்ந்து உலகு இன்புறவும் நம் ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ ஞானமா நடராசப் பெருமான் திருவடி மலர்களைச் சிந்திக்கின்றோம்.

திருவாவடுதுறை ஆதீனம்
திருவாவடுதுறை.

உ

சிவ சிவ

கயிலை மாமுனிவர்
ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித்
தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அதிபர், ஸ்ரீ காசிமடம்



திருப்பனந்தாள்-612 504
( தஞ்சை மாவட்டம் )

தேதி : 22—4—89

# வாழ்த்துரை

நாட்டரசன்கோட்டை, தீர்த்தார்குளம் ஸ்ரீ தேசிகவிநாயகர் கோயில் குடமுழுக்கு விழாச் சார்பில் மலரொன்று மலர்வதறிந்து மகிழ்ச்சி.

யார்க்கும் முன்னவனே முன்நின்றால் முடியாத பொருள் உளதோ? என்பது ஆன்ரேர் வாக்கு, யார்க்கும் எதற்கும் முன்னவனாய் முன்னின்று விக்கினங்கள் தீர்த்து வினைநலம் பெறச்செய்யும் ஸ்ரீ தேசிகவிநாயக பெருமானின் குடமுழுக்கு விழா ஆன்மிக, இலக்கிய மணங் கலந்த புதுமணம் வீசிப் பொலிவுபெற வெளி வரச் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிரேம்.

சுபம்.



உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்
26 ஆவது குருமகாசந்நிதானம்.

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த**
**பரமாசாரிய சுவாமிகள்**

தருமபுரம்
மயிலாடுதுறை (அஞ்சல்) 609 001.

29—4—89

''ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே''

விநாயகர் எல்லாச் சமயத்தவராலும் விரும்பி வழிபடப் பெறும் தெய்வமாவார். குழந்தைகள் முதல் பெரியோர்வரை அனைவரும் இவரைப் பூஜித்து அருள் பெறலாம். ஆலயங்களில் மட்டுமின்றி குளம், ஆறு இவற்றின் கரைகளிலும் வீதிகளிலும் இவர் ஆலயம் விளங்கக் காணலாம்.

எந்தச் செயலைச் செய்தாலும் இவரை வழிபட்டு தொடங்கும் செயல் இடையூறின்றி இனிதுமுடியும். சிவபிரானது மூத்த பிள்ளையாதலின் இவர் பிள்ளையார் எனப் போற்றப்படுகிறார். விநாயகர் தலங்கள்தோறும் சிறப்புப் பெயர்கள் கொண்டு அன்பர்களால் வழிபடப் பெறுதல் போல நாட்டரசன் கோட்டை தீர்த்தார் குளத்தில் தேசிக விநாயகர் என்ற திருப்பெயரோடு திகழ்கிறார்.

பாலகணபதி, தருண கணபதி, பக்த கணபதி, வீரகணபதி, சக்தி கணபதி, துலிஜ கணபதி சித்தி கணபதி, உச்சிஷ்ட கணபதி, விக்ந கணபதி, ஷிப்ரகணபதி, ஹேரம்ப கணபதி, லெக்ஷ்மி கணபதி, மகா கணபதி, விஜயகணபதி; நிருத்த கணபதி, ஊர்த்துவ கணபதி என விநாயகர் பதினாறு திருப் பெயர்களையும் வடிவ பேதங்களையும் கொண்டு விளங்குகிறார். இவர் வடிவம் தேவர், மனிதர், பூதம், விலங்கு, ஆண், பெண் ஆகிய அனைத்தையும் கொண்டது.

தீர்த்தார்குளத்து அன்பர்கள் தங்கள் அன்புக்குரிய தேசிக விநாயகர்த் திருக்கோயிலைத் திருப்பணி செய்வித்து மகாகும்பாபிஷேகம் செய்விப்பதறிந்து மகிழ்கிறோம்.

மகாகும்பாபிஷேக விழா இனிது நிகழவும் விழாமலர் தெய்வீக மணத்துடன் வெளிவந்து பயன்தரவும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

உ

சிவ சிவ

தன்கடன் அடியேனையும் தாங்குதல்

என் கடன் பணி செய்து கிடப்பதே

தவத்திரு
குன்றக்குடி அடிகளார்

குன்றக்குடி 623 206
பசும்பொன் முத்துராமலிங்கம்மாவட்டம்
தொலைபேசி : குன்றக்குடி 27

நாள் : 4—5—89

அன்பிற் சிறந்த நம் இராம. சிவசுப்பிரமணியம் அவர்களுக்கு, எல்லா நன்மைகளும் பெருக, திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

தங்களுடைய 10-4-89 கடிதமும் குடமுழுக்கு விழா நிகழ்ச்சி அழைப்பிதழும் கிடைத்தன. மிக்க நன்றி. மிக்க மகிழ்ச்சி. விழா அழைப்பிதழ் காலத்தில் கிடைத்திருந்தும் உரிய காலத்தில் வாழ்த்து அனுப்பிவைக்க இயலவில்லை. குடமுழுக்கு விழா நிகழ்ச்சியிலும் கலந்து கொள்ள இயலாமல் போய்விட்டது. காரணம் தொடர்ந்த பயணங்களேயாம். அன்பு கூர்ந்து பொறுத்தாற்றிக் கொள்ளும்படி கேட்டுக்கொள்கின்றோம்.

அருள்தரு தேசிகவிநாயகர் திருக்கோயில் குடமுழுக்குவிழா இனிதே நிறைவெய்தியிருக்கும் என்று நம்புகின்றோம்.

தங்களுக்கும் சூரக்குடி நகரத்தார் சமூகத்தாருக்கும் அருள்மிகு தேசிகவிநாயகர் இன்புறு நலன்கள் பலவும் அளித்திட நமது பிரார்த்தனை

அடிகளார்

# வாழ்த்துப்பா



நாட்டுக்கோட்டைக் குரிய,
நாட்டரசன் கோட்டையிலே,
வாழ்க்கை வளம்குவிக்கும்
தேசிகவிநாயகர் தன்
திருக்குட நன்னீராட்டுவிழா
ஒளிக்கும் ஒளிகூட்டி
உன்னதமுடன் நடக்க
உளம்நிறைந்த எம்மாசி

எம்மை ஆட்கொண்ட என்னம்மை
திருநெல்லேயின் திருவருளால்
திருகுட நன்னீராட்டு விழா
சீரும் சிறப்புடன் நடைபெற்று
எல்லா மக்களும் தேகநலத்துடன்
சகல சௌபாக்கியமும் பெற்று
வாழ்வாங்கு வாழ்ந்து வளம்பெற
வாழ்த்துகிறோம்.

**கோவிலூர் மடாலயம்**
ஆண்டவர் மன்றம்
கோவிலூர் - 623 319.

**டாக்டர் மு. சாத்தையா**
என்கிற
தமிழ்க்குடிமகன், எம்.ஏ.,பிஎச்.டி.
பேரவைத் தலைவர்,
தமிழ்நாடு சட்டமன்றப் பேரவை




தொலைபேசி 562708
அலுவலகம் :
தலைமைச் செயலகம்
சென்னை–600 009

நாள் 24—4—1989

அன்புடையீர்,

விழா சிறப்புடன் நடைபெற

எனது நல்வாழ்த்துக்களைத்

தெரிவித்துக்கொள்கிறேன்.

அன்புள்ள,

டாக்டர் மு. சாத்தையா

# தேசிக விநாயகர் துதி



கண்ணுத்தாள் திருவருளும் கம்பநாட்டான்
பேரருளும் கனிந்து பாயும்
கவினுர்ந்த பேரூராம் கலேசார்ந்த
நாட்டரசன் கவினுர் கோட்டை
எண்ணற்ற கோயில்கள் எழுதரிய
அருளாளர் இயைந்த பூமி
இயலுடனே இசைகூத்தும் இணேயில்லாப்
பொருள் வளமும் ஈர்த்து நிற்கும்
தன்னேரில் நிலவளமும் தடையில்லா
நீர்வளமும் தமிழின் பாங்கும்
தக்கார்கள் திருக்கூட்டம் மிக்கோங்க
அருள்பொழியத் ததும்பும் தண்ணீர்
பொன்ஞர்தீர்த் தக்குளத்துப் புகழ்தேசிக
விநாயகரே! பொலிவு தந்து
பொருளோடு புகழெல்லாம் தந்தெம்மைக்
காத்திடுக! புரிக காப்பு!
செல்வங்கள் தழைத்தோங்கச் செகமெல்லாம்
செழித்தோங்கச் செறிந்த கல்வி
தேரோடும் நகரெல்லாம் தெளிவோடு
வளர்ந்தோங்கத் தினம்கண் பார்த்துக்
கல்லாரும் கற்ருரும் கற்பனேயில்
திளேப்போரும் கனிந்து பாடிக்
கற்கண்டுத் தமிழாலே சொற் கொண்டு
தினம்போற்றக் கடைக்கண் பார்த்து
நல்லாராய் எல்லோரும் நாட்டரசன்
கோட்டையிலே நலங்கள் எய்த
நாற்புறமும் பூஞ்சோலே தீர்த்தார்குளம்
ஏரியுமாய் நல்கும் காட்சி
வல்லானே! தேசிகனும் விநாயகனே!
மக்களெலாம் வளர்ச்சி எய்தி
வல்லாங்கு வாழ்ந்தோங்க வழிசெய்வீர்!
திருவடிக்கே வணக்கம் காப்பு!

'பொற்கிழி கவிஞர்'
"காசிஸ்ரீ" அரு. சோமசுந்தரன்



# தேசிக விநாயகர் திருத்தசாங்கம்

## பெயர்

சீராரும் சுக்கிலத்துச் சித்திரை பத்தெட்டில்
நீராட்டும் கோபுரத்தின் நேர்த்தியினார் — யாரென்றே
பேசு கிளியே! பெருகுழனல் தீர்த்தனும்
தேசிகவி நாயகமாம் செப்பு.

## நாடு

கூறுபுகழ்ச் சூரக் குடியார் தொழுதேத்தப்
பேறு வழங்கும் பெருமானாம் — வீறுடையார்
நந்தா விளக்கெரியும் நாடுரைப்பாய் அஞ்சுகமே !
செந்தமிழர் நாடதுதான் தேர்

## நகர்

எல்லே ! இளங்கிளியே ! எங்கள் விநாயகராம்
நல்லார் அருளும் நகருரைப்பாய் — வல்லானாம்
பாட்டரசன் கம்பன் பதம்பயின்ற பேறுடைய
நாட்டரசன் கோட்டை நகர்

## ஆறு

காய்ந்து விளையும் கடுங்கோடைச் சீமையிலே
பாய்ந்தோடும் ஆறெதுவோ ? பைங்கிளியே —
தோய்ந்த மனப்
பூநாறு கண்ணாத்தாள் பொங்குமருட் கண்ணிரண்டின்
தேனாறே பாயும் தினம்.

### மலை

ஏழுவகைத் தீர்த்தம் இலங்கு திருநகரில்
சூழுமலை சொல்வாய் சுகமே நீ — சோழகுல
வீரன் தொடவளரும் வீரகண்டான் ஊருணிமேல்
சாருமலை கோபுரங்கள் தாம்.

### ஊர்தி

வெள்ளைக் குதிரையின்மேல் வெட்டரிவாள் தோளேந்தி
உள்ளம் கவர்கருப்பன் ஊரினிலே — உள்ளார்தான்
தாஞ்சாரும் ஊர்திச் சமர்த்துரைப்பாய் பைங்கிளியே !
மூஞ்சூறே ஊர்தி முகம்.

### படை

மூக்குச் சிவந்தவனே! முத்தமிழைப் பேசுவதால்
வாக்கும் சிவந்த வனக்கிளியே — தாக்குபடை
சேனை முதல்வர்க்குச் சேர்ந்தவிதம் செப்பிடுக
ஆனைக்கை என்றே அறை.




### முரசு

காக்கும் கணபதியார் காலம் அறிந்தன்பர்
நோக்கி வருகின்ற நுட்பத்தை — வாக்குப்போல்
வாயில் உரைமுரசைப் பைங்கிளியே ! சொல்லிடுக
கோயில் மணியதுதான் கூறு.

### தார்

முத்தான குட்டியேதும் முன்னாட் பெரும்புலவர்
கொத்துமலர்ப் பாவாழும் கோகிலமே! — பக்தர்கள்
தாங்கு கணபதியின் தாருரையாய்! நீர்நிலைகள்
பாங்காம் அறுகம்புல் பார்.

### கொடி

கல்வியுடன் செல்வம் கலைகள் சிவஞானம்
எல்லார்க்கும் நல்கிவரும் எம்பெருமான் - எல்லைக்கண்
நாட்டுக்கொடி என்கிளியே ? நல்லார் நகரத்தார்
ஏட்டில் வளரும் இருப்பு.

பேராசிரியர் அர. சிங்காரவடிவேலன்
ஸ்ரீசேவுகன் - அண்ணாமலை கல்லூரி,
தேவகோட்டை.

உ

சிவமயம்



# வினை தீர்க்கும் விநாயகர்

''பிடியதன் உருஉமை கொள, மிகு கரியது
வடிகொடு, தனதடி வழிபடும் அவர்இடர்
கடிகண பதிவர அருளினன், மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே''

திருச்சிற்றம்பலம்.

சிவபெருமானது மூத்த பிள்ளை, விநாயகர்; இளைய பிள்ளை முருகன்; வீரபத்திரரும் வைரவரும் பெருமானது முனிவுக் காலத்துத் தோன்றிய பிள்ளைகள்.

நாம் எல்லாம் உயிர்கள்; வினைகள் பல செய்து உழல்பவர்கள், ஆணவத்தினால் தீ நெறியில் உந்தப்பட்டு, நன்னெறியை மறந்தவர்கள்.

## கொடை வடிவினர்

நம்மை உய்வித்து ஆட்கொள்ளச் சிவபெருமான் விரும்புகிறார். ஆணவத்தின் கேட்டினை நமக்கு உணர்த்துவதற்காகவும், வினைப் பயன்களாகிய இன்ப துன்பங்களை அவரவரே நுகர்ந்து கழிப்பதற்காகவும். சிவபெருமான் கருணைகொண்டு நம் மீது மாயை என்ற மற்றொரு பாசத்தைப் படர விடுகிறார். மாயை என்பது சிவபெருமானது வைப்பு ஆற்றல் (Potential Energy) அதனை விரித்து அவரவர்க்கு ஏற்ற உடல், உலகம், கருவி, நுகர் பொருள்களாக ஆக்கி அருளினார்.

## பிரணவத் தோற்றம் :

ஆக்கத்தின் முதற்கட்டமாக, இறைவன் தனது வலது காத்து உடுக்கையை அடித்தார் பிரணவ ஒலி (நாதம்) எழுந்தது. ஓம் என்பது குவி பிரணவம்; அஉம் என்பது அதனின்று விரிந்து விரைந்து வெளிப்படும் விரிபிரணவம். அவற்றை முறையே சிவனும் சத்தியும் இயக்கினார்கள்.

## பிரணவப் பிள்ளை :

சிவசத்தியரது குவிபிரணவ, விரிபிரணவக் கூட்டத்தால், பிரணவப் பிள்ளை தோன்றியது.

## ஆனைமுகப் பிள்ளை :

ஐயறிவு வரையுள்ள குற்றுயிர்களும், மானுடமாகிய சிற்றுயிர்களும், சிவபூத கணங்களாகிய சீருயிர்களும் இணைந்த ஒரு தோற்றத்தை அப்பிள்ளை பெற்றது.

ஆனைமுகம், மனித உடல், குள்ளப் பூதத்தின் சின்னக் கால்கள் - இது மூத்த பிள்ளையின் ஓங்காரத் தோற்றம்.

## ஓங்கார விநாயகர் :

மூத்த பிள்ளையாகிய இவரே, பின்னர்த் தோன்ற இருக்கும் எண்ணற்ற இறை வடிவ வேறுபாடுகளுக்கும், பூத கணங்களுக்கும் முதன்மையும் தலைமையுமான நாயகர்; விசேடமான வடிவும் திறனும் கொண்டவர்; எனவே ஓங்கார விநாயகர், பிரணவப் பிள்ளையார், கணபதி என்ற சிறப்புப் பெயர்கள் இவருக்கே உரியன.

## மூலாதார விநாயகர் :

உயிர்களாகிய நம்மைக் காப்பவரும், கரப்பவரும், கரைஏற்றுபவரும் சிவபெருமானே நமது படிமுறை அறிவு வளர்ச்சியின் ஒவ்வொரு நிலையிலும் உறுதுணையாய் நிற்கும் அவரது

தாயன்பும், தந்தை நோக்கும் போற்றி இன்யுறத்தக்கன. அவரது அருளாக்கத்தின் கீழ் எல்லே (Terminus) யாக அமைவது மூலாதாரம்.

நம்மைப் பிணித்துள்ள மலம், நீங்குதல் வேண்டும்; நாம் உய்தி பெற வேண்டும் என்பதே சிவபெருமானது விருப்பம். (மலக்கட்டு) விடுதலும் (இறையருள்) பெறுதலுமே 'விடுபேறு' எனப்படும். அதற்கு ஒரு தொடக்க இடமாக அமைவது மூலாதாரம் ஆகும்.

மூலாதாரத்தை எருவாய்க்கும் கருவாய்க்கும் இடைப்பட்டதாக இடம் சுட்டுவர் ஆன்ரோர். எரு என்பது தீமைபயக்கும் மலம்; கரு என்பது முத்திப் பேற்றிற்கான வித்து.

நுண்ணிய இந்த மூலாதாரத்தை (Strategic Point)த் தனக்கு இருப்பிடமாகக் கொண்டவர் விநாயகர் இவரே மூலாதார விநாயகர் என வணங்குவது மரபு.

## விக்கினேசுவரர் :

மூலாதாரத்தில் இருந்து கொண்டு, இடர்களை (விக்கினங்களை) நீக்கவும் ஆக்கவும் வல்லவராதலால், இவரை விக்கின ஈசுவரர் என்றும் விக்கின விநாயகர் என்றும் அழைப்பர்.

முப்புரம் எரிக்கும் அப்பனுக்குத் தேர் சமைத்தனர் தேவர்கள் ஆனைமுகப் பிள்ளையை அவர்கள் மறந்து செயல்பட்டமையால், அப்பனே ஏறிய தேராயிருந்தும் அச்சினை முறித்து, அமரர்க்கு இடர் விளைவித்தவர், பிள்ளையார்.

தினைப் புனத்து வள்ளியைத் தமக்குத் திருமணம் செய்து வைக்குமாறு அண்ணனிடம் வேண்டினுர் முருகன். அன்புத் தம்பி அடிபணிந்த போது, வள்ளியை வழங்கி, இளையவருக்கு இன்னருள் புரிந்தவரும் இவரே.

விக்கினேசுவரர் என்பதுதான் எவ்வளவு பொருத்தம்!

## வல்லபை கணபதி :

சிவபெருமானது உடுக்கை ஒலியிலிருந்து தோன்றியது, நாதம். நாத தத்துவத்தின் தலைவர் சிவன். நாதத்தினின்று விந்து தோன்றியது. விந்து தத்துவத்தை இயக்குபவள், சக்தி.

விந்து சத்தியின் வெளிப்பாடே வல்லபை என்ற குண்டலினி சத்தி, குண்டலினியையே தனது ஆற்றலாகக் கொண்டவர். விநாயகர் எனவே குண்டலினி விநாயகர் என்றும் வல்லபை கணபதி என்றும் இவர் அழைக்கப்பெறுகிருர்.

## பிள்ளையார் சுழி :

'உ' என்பது பிள்ளையார் சுழி. இதிலுள்ள வட்ட வடிவம், விந்துவாகிய சத்தி, நீள்கோடு, நாதமாகிய சிவன், ஓங்காரப் பிரணவத்தின் சுருங்கிய வடிவமே, பிள்ளையார் சுழி.

## அப்பனுக்குப் பிள்ளை தப்பாமல் :

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன, உயிர்களாகிய நாம் உய்தற் பொருட்டுச் சிவபெருமான் இயற்றும் ஐந்தொழில்கள். அவ்வாறு இவ் உலகத்தொகுதி படைக்கப் பெற்ற முதற் கட்டத்தில் தோன்றியவர், பிள்ளையார் தந்தை செய்யும் ஐந்தொழிலிலும் முதற்கட்டத் தலைவராகத் திகழ்பவர் இவரே.

விநாயகரும், முருகனும், சிவபெருமானது அருள் நோக்கில் தோன்றியவர்கள்; வீரபத்திரரும் வயிரவரும் முனிவுக் காலத்துத் தோன்றியவர்கள். அப்பனுக்குப் பிள்ளை தப்பாமல் என்பதற்கேற்பப் பிள்ளைகளது தோற்றமும் குணமும் பெருமானை ஒத்து இருப்பது இயல்பு.

சாத்துவிக குணத்தையும், அமைதியான வாழ்வையும் விரும்பும் நாம் முனிவுத் தோற்றமுடைய வீரபத்திரரையும் வயிரவரையும் பரிவாரத் தெய்வங்களாகக் கொண்டு அருள் நோக்குடைய ஆனைமுகனையும், ஆறுமுகனையும் சிறப்பாக வணங்குகிறோம்.

## மனித உடலினுள் மாண்புறு பிள்ளையார் :

நமது உடம்பினுள் கீழ்மையில் உழலும், உயிரை மூலாதாரத்தில் வீற்றிருந்து மேல் நோக்கிச் செலுத்துபவர் **மூலாதார விநாயகர்.**

முதுகுத் தண்டு என்னும் சுழுமுனை நாடியை (Spinal cord) ஆட்டுவித்துத் தொழில்படுத்தி உயிரது மேல் நிலைஉய்திக்குத் துணை நிற்பவர் **நர்த்தன விநாயகர்.**

இருதயத்தின் வலது கீழ் அறை (Right Ventricle) யிலிருந்து அழுக்கான நீலக்குருதியை நுரையீரல் (Lungs) வழியாக வலஞ்சுழித்து ஏற்றி, அங்குப் பிராணவாயுவைக் கொண்டு தூய செங்குருதியாக்கி, இருதயத்தின் இடது மேல் அறை (Left artrium) யில் சேர்ப்பவர் **வலஞ் சுழி விநாயகர்.**

காற்று மண்டலம் நரம்பு மண்டலத்தின் மூளைப் பகுதி எனப் பற்பல இடங்களிலும் நின்று அருள் பாலிப்பவர் ஓங்கார விநாயகர்.

## இறக்குமதிப் பொருளன்று :

இவ்வாறு அண்டத் தொகுப்பின் முதல் தோற்றமான பிள்ளையார் நமது மனித உடம்பிலும் பல கோணங்களில் **பெருள்ளரப் பிள்ளையாரரக** தங்கி நின்று அருள் பாலிக்கிறார்

எனவே வல்லபை விநாயகரை 'வாதாபிச் சரக்கு' என்றோ ஏழாம் நூற்றாண்டின் இறக்குமதிப் பொருள் என்றோ பரஞ்சோதியாரது படை எடுப்பு வெற்றியால் தமிழகத்தில் நுழைந்தவர் என்றோ, அண்மைக்கால ஆய்வாளரைப் போல நாமும் மயக்கம் கொள்ள வேண்டியதில்லை.

அநாதி முதல்வராகிய சிவபெருமானது தலைப்பிள்ளையே இந்த ஓங்காரப் பிள்ளை என்றும் உலகில் நமது நலன் கருதித் தோன்றிய மூலாதார மூத்த பிள்ளை என்றும் மன-உறுதியோடு வணங்குவதே சாலப் பொருந்துவதாகும்.

## நமது கடன் :

பேரண்ட வெளிப்பாட்டின் முதற்கட்டத் தோற்றமாதலால் ஒவ்வொரு நிகழ்ச்சியின் தொடக்கத்திலும், பிள்ளையாரை மனம், மொழி மெய்யால் வாழ்த்தி வணங்குதல் நம் கடமை-யாகும். பிள்ளையார் சுழியிட்டு எழுதத் தொடங்குதல், விநாயகர் துதி பாடி நூலாக்கம் செய்தல், கணபதி ஓமம் செய்து மங்கல காரியங்களைத் தொடங்குதல் முதலிய சிறந்த மரபுகள், நம் உள்ளத்தை மேன்மேலும் பண்படுத்தவும், செயல்திறனைச் செம்மைப்படுத்தவும் எடுத்த காரியம் இடையூறின்றி நிறைவேறவும் உறுதுணையாம்.

திருவாக்கும், செய்கருமம் கைகூட்டும், செஞ்சொல்<br>
பெருவாக்கும் பீடும் பெருக்கும் - உருவாக்கும்<br>
ஆதலால் வானோரும் ஆனைமுகத் தானைக்<br>
காதலால் கூப்புவர்தம் கை.

திருச்சிற்றம்பலம்

சிறுகூடற்பட்டி சிவத்திரு
அ. சொ. சுப்பையா, எம்.ஏ.,



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



# விநாயகர் பெருமை

உலகு கண் கூடாக விளங்குவது. கடவுள் கண் கூடாக விளங்காதது. கண் கூடாக விளங்காத ஒன்றைக் கண் கூடாக விளங்கும் ஒன்றைக் கொண்டே உணர்தல் வேண்டும். உலகு சுட்டி உணரப்படுவது. சுட்டி உணரப்படுதற்குப் பெயர், வடிவு முதலியன உண்டு. பெயருடைய ஒன்று தோற்றம், நிலே, இறுதி என்னும் மூன்று தொழிற்பாடுகளேயுடையதாகும். மூன்று தொழிற்பாடுகளேயும் உடைய ஒன்று தானே தோன்றி நின்று அழியாது. அது தொழிற்படுதற்கு தொழிற்படுத்த ஒன்று வேண்டற்பாலது. என்று மனிதன் சிந்தனே செய்யத் தொடங்கினுனே அன்று தோன்றியதே மதம் என்ற ஒன்று.

இதனேயுணர்ந்த மனிதன் இந்தத் தொழிற்பாடு ஏன் நிகழ வேண்டுமென்று மேலும் சிந்திக்கத் தொடங்கிய பொழுது தான் உயிரின் பொருட்டு இம் மூவினே நிகழ்வும் அவசியம் என்பதை உணர்ந்தான்.

உலகைப் போல உயிர் அறிவற்றதுமன்று. கடவுளேப் போல அது முற்றறிவுடையதுமன்று. அஃது இரண்டுக்கும் இடைப்பட்டது. அஃது அறியாமையால் சிற்றறிவுடைய தாயிருப்பது. அச்சிறுமை நீங்கினுல் உயிர் சிவமாகும் என்பதையுணர்ந்தான்.

சிற்றறிவுடைய உயிரின் பொருட்டு முற்றறிவுடைய இறைவன் அருட்டொழில்புரிகிருன். இறைவனின் இரக்கமே இதற்குக் காரணம். இரக்கம் இறைவனின் இயல்பு. இறைவன் உயிரின் அறியாமையைப் போக்கி உயிருக்கு உடல், அந்தக்கரணங்கள், உலகம் இன்பதுன்பங்களேக் கொடுக்கிருன். இறைவனின் துணேயால் உலக வாழ்வைப் பெற்ற உயிர்தான் பெற்ற நிலேமையை மறவாது நினேந்து வாழ்ந்தால் வினேகளின் வயப்படாது, அறியாமையாகிய சிறுமை நீங்கப் பெற்று சிறைத்தன்மையையடையும் இல்லேயேல் உயிர் பிறவிவாய்ப்பட்டு உழலாநிற்கும். இதுவே உயிர்களின் நிலே என்ற உணர்வு மனிதனின் உள்ளத்தே தோன்றியதன் விழைவே மதங்களின் தோற்றமாகும்.

இதனேச் சிந்தனே செய்த தமிழ்ப்பேரறிஞர்களுள் தலேயாய தொல்காப்பியர் தமிழ் மக்களின் வழிபடு 'கடவுளர்களாக மாயோன் மேய காடுறை உலகமும் சேயோன் மேயமை வரை உலகமும், வேந்தன்மேயதீம் புனல் உலகமும் வருணன் மேய பெருமணலுலகமும் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' என நிலத்தையும் அதிலுள்ள மக்கள் வழிபடு தெய்வங்களேயும் கூறியுள்ளதினின்று, திருமால், முருகன், இந்திரன், வருணன் ஆகியவர்களேத் தெய்வங்களாக வழிபட்டு வந்தனர். என்பதைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

மேலும் கொடிநிலே, கந்தளி, வள்ளி யென்ற வடுநீங்கு சிறப்பின் உள்ளன மூன்றும் கடவுள்வாழ்த்தொடு கண்ணியவருமே எனவும் சுட்டிக்காட்டுவதினின்று சிவன் கொற்றவை ஆகிய தெய்வங்களேயும் வழிபட்டு வந்தனர் என்பது தெரிகிறது.

இதினின்று அறுவகைச் சமயங்களின் மொத்தத் தொகுப்பே இந்துமதம் என ஆதி

சங்கராச்சாரிய சுவாமிகளால் நெறிப்படுத்தப் பட்ட நிலையில் சைவம், வைணவம், காணு-பத்தியம், கௌமாரம் சாக்தம், சௌரம் என்று ஒழுங்குபடுத்தப்பட்டது என்பதை நாமறிவோம்.

சிவனை முழுமுதற் கடவுளாகக் கொள்வது சைவம் எனவும் திருமாலை முழுமுதற் கடவு-ளாகக் கொள்வது வைணவம் எனவும் முருகனை முழுமுதற்கடவுளாகக் கொள்வது கௌமாரம் எனவும் சக்தியை முழுமுதற் கடவுளாகக் கொள்வது சாக்தம் எனவும் சூரியனை முழு-முதற்கடவுளாகக் கொள்வது சௌரம் எனவும் கணபதியை முழுமுதற் கடவுளாகக் கொள்வது காணுபத்தியம் எனவும் பெயர் பெற்றன.

சௌரம் சூரியனை முழுமுதற் கடவுளாகக் கொண்டாலும் தேவர் தலைவன் இந்திரனின் வழிபாடே சௌரம் எனக்கொள்வதில் தவறில்லை

ஆனல் காணுபத்தியம் பற்றிச் சிந்திக்கின்ற பொழுது. அதைப்பற்றிய வழிபாட்டு நெறி பிற்காலத்திலேயே தமிழர்களால் தொடங்கப் பட்டிருக்க வேண்டு மென்பது அனைவராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மையாகும்.

என்ருலும் திருக்குறளில் ''ஆதிபகவன்'' என முதற் செய்யுளில் சுட்டப் பெறுவது விநாயகரையே எனச்சில அறிஞர்கள் எடுத்துக்காட்டுகிருர்கள். விநாயகர்வழிபாடு கி.பி. 6 அல்லது 7 ஆம் நூற்ருண்டுக்குப் பின்னரே தமிழ் நாட்டில் பரவத் தலைப்பட்டது எனக் கூறும் ஆராய்ச்சியாளர்களும் உளர்.

பிடிவாதமான எந்தக் கோட்பாடுகளுக்கும் இந்துமதம் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்ட தில்லை, என்பது அதன் தனிச்சிறப்பு. அறிவு பூர்வமான எவருடைய சிந்தனைகளையும் இந்து மதம் புறக்கணித்ததில்லை. ஏனையமதத்தினரை அஞ்ஞானிகள் என்று அழைக்கும் ஆணவத்-தையும் இந்துமதம் ஒருபோதும் பெற்றதில்லை இறைவனல் படைக்கப்பட்ட அனைவரையும் இறைவனின் அம்சம் எனக்கருதும் இந்து மதம் வேற்று மதத்தினரையும் வேறுபடுத்திப் பார்க்காத பண்புடையது.

ஏனைய மதங்களில் நிம்மதியைக்காணுதவர்கள் அறிந்தோ அறியாமலோ இந்துமத உபதே-சங்களை நோக்கித் தங்கள் பார்வையைச் செலுத்திக் கொண்டிருக்கிருர்கள். மேற்கத்திய பொருளியல் நாகரிகத்தின் பிரச்சினைகளை கிழக்கத்திய ஆன்மீக உணர்வால்தான் சமாளிக்க முடியும் என்ற நிலையில் விநாயக வணக்கத்-தின் அடிப்படைக் கருத்துக்களைப்பற்றிச் சிந்திப்போம்.

இந்து மதத்திற்குரிய கடவுளர் பலருள் 6 ஆம் நூற்ருண்டிற்குப் பிறகு விநாயகர் மிக்க முதன்மையும் சிறப்பும் உடையவராகக் கருதப்படுகிருர். இந்துமதத்தைச் சார்ந்த அன்பர்கள் எந்தச் செயலைத் தொடங்குவதாக இருந்தாலும் விநாயகரையே முதலில் வணங்கித் தொடங்கும் வழக்கமுள்ளவர்களாக உள்ளனர். ''முன்னவனே யானை முகத்தவனே'' என இராமலிங்க அடிகளார் குறிப்பிடுதல் காணலாம்

மக்கள் முதன் முதலில் தோன்றிய இடம் மலையும் மலைசார்ந்த நிலமுமாகிய குறிஞ்சித்-திணையே என்பர் ஆராய்ச்சியாளர். யானை குறிஞ்சி நிலத்திற்குரிய விலங்கு. குறிஞ்சியின் தலைவன் முருகன். எனவே முருகனுடன் விநாயகரையும் யானையின் உருவின் பெரிய தன்மை நோக்கி, யானைமுகமுடைய விநாயகர் ஏனைய எல்லாக்கடவுளரிலும் மிக்கசிறப்பும் முதன்மையும் உடையவர் என வழிபடத் தொடங்கினர் என்பது தெரிகிறது.

ஓசை ஒலியெலாம் ஆனுய் நீயே, என்ற-படி எல்லா ஓசை ஒலிகளுக்கும் மூலமாகத் திகழ்வது, பிரணவம் என்னும் ஓங்காரமே-ஆகும். அம் மூல முதல் ஒலியினின்றே எல்லாப் பொருள்களும், உலகங்களும் தோன்று வன வாயின என்பர் ஞானிகள். நம் உடலின் அமைப்பும், நம்முடைய காது, இருதயம், இரைப்பை, கருப்பை, முதலிய உறுப்புக்களும் பிறவும் ஓங்கார வடி வினவாகவே இருத்தலைக் காணலாம். சங்கு முதலிய இயற்கைப் பொருட்களும் அவ்வடிவின வாகவே காணப்-படுகின்றன. இவ்வாற்ருல் உலகத் தோற்ற-மும் இயக்கமும் ஓங்காரத்தினுலேயே நடை

பெறுகின்ற தென்பர் ஞானிகள். தாம் கண்ட இவ்வுயரிய உண்மையினை எளியரும் உணர்ந்து உய்யும் பொருட்டு முழுமுதற் பொருளை அவ்வோங்கார வடிவினதாக இயற்கையில் அமைந்து தோன்றும் யானைமுகம் கொண்டுள்ள தாகவே ஞானிகள் உருவகம் செய்து காட்டி உணர்த்துவாராயினர்.

## தத்துவ நுட்பம் :-

விநாயகரின் திருவுருவத்தில் நாபி பிரமனை யும், முகம் திருமாலையும், முக்கண் சிவபிரானை யும், இடப்பக்கம் சக்தியையும், வலப்பக்கம் சூரியனையும் குறிப்பதாகப் பெரியோர் கூறுவர். விநாயகரின் ஐந்து கைகளிலுள்ள பொருள் களுள் பாசம் படைத்தலையும் அங்குசம் அழித்தலையும் ஒற்றைக் கொம்பு காத்தலையும் துதிக்கை மறைத்தலையும் மோதகம் அருளலையும் உணர்த்துவதாகவும் நூல்கள் நுவலும்.

விநாயகர் விலங்குத்தலையும் மனித உடலும் தேவர்க்குரிய பாதங்களும் பெற்றுத் திகழ்-கின்றார், ஆணும் பெண்ணுமாக அமைந்து திகழ்வது உலகம் என்பதனைச் சுட்டும் முறை-யில் ஒடித்த தந்தத்தையுடைய இடப் பகுதி பெண்கூருகவும், வலப்பகுதி ஆண்கூருகவும் கொண்டு விளங்குகிறார். விநாயகர் அறுவடைக் குரிய கடவுளென்றும் அதுபற்றியே அறுவடைப் பயனையழிக்கும் பெருச்சாளியை அடக்கி ஊர்-தியாகக் கொண்டுள்ளார். என்றும் கூறுவர். இங்ஙனம் முரண்பாடுகள் பலவற்றை ஒருங்-கிணைத்துக் கொண்டுள்ள விநாயகரின் வடிவம் அத்துவைத சித்தாந்ததத்துவ நுட்பத்திலைக் காட்டிக் கொண்டிருக்கிறது என்று 18-ஆம் நூற்ருண்டில் வாழ்ந்திருந்த நல்ல கவியென்னும் அத்வைததத்துவாச் சாரியார் பாடியுள்ளார்.

## பிற நாடுகளில் விநாயகர் வழிபாடு :-

யானை முகமுடைய விநாயகப் பெருமான் இந்துமதத்துக்கு மட்டுமேயன்றி சமணம், பௌத்தம், ஆகிய மதங்களிலும் சிறப்பாகப் போற்றி வழிபடப்படுகிறார். இவரது வழிபாடு நேபாளம், திபெத்து, பர்மா, சயாம், இந்தோ-சீனு, சீனு, ஜாவா, கலிபோர்னியோ, ஜப்பான், கொரியா முதலிய நாடுகளிலும் சிறப்புறத்திகழ்கின்றது.

## திருவுருவங்கள் :-

விநாயகரின் திருவுருவங்கள் வெவ்வேறு வகைகளில் வெவ்வேறு நிலைகளில் சிற்ப நூல்கள் சிறப்புற அமைத்து விளக்கியுள்ளன. சிற்பநூல்களில் பின்வருமாறு விநாயகரின் திருவுருவங்கள் 32 குறிப்பிடப் பெற்றிருக் கின்றன. அவையாவன :-

1) பாலகணபதி 2) தருணகணபதி 3) பக்தகணபதி 4) வீரகணபதி 5) சக்தி-கணபதி 6) துவஜகணபதி 7) சித்தி(மங்கல) கணபதி 8) உச்சிஷ்டகணபதி 9) விக்கினராஜ கணபதி 10) க்ஷிப்ரகணபதி 11) ஏரம்பகணபதி 12) லட்சுமிகணபதி 13) மகாகணபதி 14) விஜய (புவனேச) கணபதி 15) நிருத்த-கணபதி 16) ஊர்த்துவகணபதி 17) ஏகாட்சர கணபதி 18) வரகணபதி 19) திரியட்சர-கணபதி 20) க்ஷிப்ரப்ரசாதகணபதி 21) அரித்-திரகணபதி 22) ஏகதந்தகணபதி 23) சிருஷ்டி கணபதி 24) உத்தண்டகணபதி 25) ரிணமொச் சககணபதி 26) துண்டிகணபதி 27) துவிமுக கணபதி 29) சிம்மகணபதி 30) யோககணபதி 31) துர்க்காகணபதி 32) சங்கடஹரகணபதி.

இம் முப்பத்திரண்டு கணபதிகளுள் முதற் கண் உள்ள 16 கணபதிகளின் திருவுருங்களும் காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீசந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்களால் நிறுவப் பெற்ற இராமேசுவரம் சங்கரமண்ட-பத்தில், மிக அழகிய முறையில் எழுந்தருளச் செய்யப் பெற்றுள்ளமை அன்பர்கள் அனைவரும் கண்டு இன்புறத்தக்கன.

நேப்பாளத்திலும் இந்தோசைனாவிலும் நான்கு முகங்களையுடைய விநாயகர் திருவுருவங்கள் மிகுதியாகக் காணப் பெறுகின்றன.

பிரிட்டிஷ் பொருட்காட்சி சாலையில் ஐந்து முகங்களுடனும் பத்துக்கரங்களுடனும் ''மகாராஜலீலாசனம்'' என்னும் நிலையில் தாமரை மலரை ஏந்திய இடக்கையையுடைய வல்லபை என்னும் சக்தியை தமது இடப்பக்கத்தொடையில் அமரச்செய்து தழுவிக் கொண்டுள்ள ஏரம்பகணபதியின் திருஉருவம் காணப்படுகிறது

மேலும் சுசீந்திரம், ஜபல்பூர், மதுரை, வேலூர், திருநள்ளாறு, துவாரசமுத்திரம், நஞ்சன்கோடு, திருப்பருப்பதம், ஆகிய இடங்களிலும் அற்புதமான விநாயகரின் சிற்பங்கள் காணப் பெறுகின்றன.

திருவொற்றியூர் தியாகேசுவரர் கோயிலிலும் நாகபட்டினம் காயாரோகணேசுவரர் கோயிலிலும் விநாயகர் சிங்கத்தின் மீது ஐந்து தலைகளுடன் கூடிய பஞ்சமுகவிநாயகர் அமர்ந்து கொண்டுள்ள நிலையில் அழகிய சிற்பங்கள் காணப்படுகின்றன.

திருவலஞ்சுழி என்னும் தேவாரப் பாடல் பெற்றதலத்தில் வலம்புரி விநாயகர் திருவுருவம் மிகச்சிறப்பான முறையில் அமைந்திருக்கிறது.

விநாயகப் பெருமான் பொதுவாகக் கோயில்களில் பெரும்பாலும் திருச்சுற்றுலைகளின் முகப்பிலேயே இடம் பெற்றிருப்பது வழக்கம். ஆனால் பசும்பொன்முத்துராமலிங்கம் மாவட்டம் பிள்ளையார்பட்டியில் கோயில் கருவறையிலேயே விநாயகர் மூலவராக எழுந்தருளியுள்ளார். வேறு எங்கும் இல்லாத முறையில் அவர் அங்கு இரண்டு திருக்கைகளுடன் மட்டும் காணப்படுகிறார். விநாயகருக்குத் தமிழ் நாட்டில் எடுக்கப்பட்ட கோயில்களில் முதன்மையானதும் பழமையானதும் இதுவேயாகும். ஈக்காட்டூர் கோன் பெருந்தச்சன் என்பவனால் இது உருவாக்கப்பட்டது என்பது கல்வெட்டால் நாம் அறியும் செய்தியாகும்.

தஞ்சைமாவட்டத் திருமருகலுக்கு அடுத்துள்ள திருச்செங்காட்டாங்குடியில் உள்ள சிவன் கோயிலில் வாதாபிகணபதி காட்சியளிக்கிறார். இக்கணபதி முதலாம் நரசிம்மபல்லவனிடம் படைத்தளபதியாக இருந்த பரஞ்சோதி என்றழைக்கப் பெற்ற சிறுத்தொண்டரால் தெலுங்கு நாட்டிலுள்ள வாதாபியிலிருந்து கொண்டுவரப்பட்டதாக அறிகிறோம்.

திருவையாருக்கு அருகிலுள்ள கணபதி அக்ரகாரத்தில் தங்கப்பிள்ளையார் காட்சியளிக்கிறார்.

சுருங்கச் சொன்னால் எந்தவித ஆலயமும் இல்லாத ஊரில் கூட தற்காலத்தில் அரச மரத்தடியிலிருந்து அன்பர்கட்குத் திருவருள் பாலிக்கின்ற நிலையில் விநாயகர் வழிபாடு நடைபெற்று வருகிறதென்பது அனைவரும் அறிந்ததே.

காஞ்சிபுரத்தில் திருவோணகாந்தன் தளி என்னும் தேவாரப்பாடல் பெற்ற கோயிலில், கருவறை மண்டபத்தினது நுழைவாயிற் சுவரின் முகப்பில் விநாயகர் திருவுருவம் ஒன்றுளது. அவர்தம் அருகே சென்று நம் செவியை அணுகவைத்து நிற்பின் ஒருவகை ஓங்கார ஒலி ஒலித்துக் கொண்டிருப்பதைக் கேட்கலாம். இந்திருவுருவையமைத்த சிற்பக்கலைஞர் யாரோ? சிலையில் அமைந்த திருவுருவில் எங்ஙனம் இவ்வொலி எழுகின்றதென்பது வியப்பாக உள்ளது. எத்தனையோ நெடுங்காலமாக பல்லாயிரக் கணக்கான மக்கள் இவ்வொலியைக் கேட்டு மகிழ்ந்து வியந்து வணங்கிச் செல்கின்றனர்.

## நூல்கள் :-

கணேசபுராணம் முற்கலபுராணம், பவிஷ்ய புராணம், விஷ்ணுதர்மோத்தரபுராணம், பிரம்மவைவர்த்தபுராணம், கருடபுராணம், அக்னிபுராணம், கணபதிஉபநிஷத், கணேசகீதை முதலிய பல நூல்கள் விநாயகரின் பெருமையை விளக்குகின்றன. ஆதிசங்கரர்

கணேசபுஜங்கம், கணேச பஞ்சரத்தினம் ஆகிய நூல்களை அருளிச் செய்துள்ளார்.

கணகர், முற்கலர், பார்க்கவர், மதங்கர், வியாசர் முதலிய முனிவர்கள் விநாயகரை வழிபட்டு அருள்பெற்றுள்ளனர். திருஞான சம்மந்தர், நம்பியாண்டார் நம்பிகள், கபில-தேவர், அதிரா அடிகள், மெய்கண்டார், ஔவையார், கச்சியப்பமுனிவர் முதலிய தமிழ்ச் சான்ரோர்கள் பலர் விநாயகரைத் துதித்து வழிபட்டுள்ளனர். கச்சியப்பமுனிவர் தமிழிற் பாடியுள்ள விநாயகர் புராணம் பெரும் புகழ் பெற்ற தொன்ருகும்.

## முடிவுரை :-

விநாயகப் பெருமானைப் பெரும்பாலும் திருமணம் ஆகாத பிரமசாரி நிலையினராகவே பொது மக்கள் கருதுவர். எனினும் விநாயகருக்கு வல்லபை என்னும் சக்தியை மனைவியாக நூல்கள் குறிப்பிடும். வல்லபையோடு கூடிய கணபதிக்கு வல்லபகணபதி என்பது பெயர். இவர் பத்துக்கைகள் உடையவராக விளங்கு வார். இப்பத்துக் கைகளிலும் முறையே திருமகள், பார்வதி, இரதி, நிலமகள் ஆகியோருக்கு உரிய தாமரை, பாசம், உற்பலம் நெற்கதிர் ஆகியவைகளையும் திருமால், சிவபிரான், மன்மதன், வராகன், ஆகியோ-ருக்கு முறையே உரிய சக்கரம், சூலம், வில், கதாயுதம் என்பனவற்றையும் ஒற்றைத் தந்தம் மதுளம் பழம் ஆகியவற்றையும் ஏந்திக் கொண்-டிருப்பர். இவ்வல்லப கணபதியை வழிபடு வோர் எல்லா வல்லமைகளையும் பெறுவர். நினைத்த செயல்களை யெல்லாம் இனிது நிறை-வேற்றி முடிப்பர். இராமலிங்க அடிகளார் 'வல்லபகணேசர்' சித்திவிநாயகர் பற்றிப்-புகழ்ந்து சிறந்த சில திருப்பதிகங்களைத் தமது திருவருட்பாவில் அருளிச் செய்துள்ளார்.

ஞானத் தெய்வமாகிய விநாயகர் சித்தி, புத்தி எனும் இரு மனைவியரை மணந்து கொண்டு, க்ஷேமம் லாபம் என்னும் இரு புதல்வர்களைப் பெற்றெடுத்துள்ளனர் என்பர் பெரியோர். விநாயகரை வழிபடுபவர்களுக்கு நினைத்தது கைகூடும், அறிவாற்றல் ஓங்கும், இன்ப வாழ்வும் நற்பேறுகளும் ஏற்படும் என்பது இதன் கருத்து. எனவே இத்தகைய பல சிறப்புக்களையுடைய விநாயகப் பெருமானை நாம் அன்புடன் வணங்கினல் நமக்கு ''வாக் குண்டாம்; நல்ல மனமுண்டாம்; மாமலரால் நோக்குண்டாம்; மேனிநுடங்காது'' ஆதலின் விநாயகரை நாம் அன்புடன் பணிந்து வழிபட்டு நலம்பலவும் பெற்று உய்வோமாக.

வையம் நீடுக மாமழை மன்னுக
மெய்விரும்பிய அன்பர் விளங்குக
சைவநன்னெறி தாந்தழைத் தோங்குக
தெய்வவெண்டிரு நீறு சிறக்கவே

ஆசிரியர் :- வித்துவான்.
நா. சுப்பிரமணியன்





# தேசிக விநாயகர் திருவருள் பெறுக

| | | | |
|---|---|---|---|
| பாட்டரசன் | கம்பனவன் | பதம்பயின்ற | திருமண்ணும் |
| நாட்டரசன் | கோட்டையெனும் | நலங்கொழிக்கும் | நன்னகரில் |
| கேட்டவரம் | தருகின்ற | தீர்த்தக் | குளத்தோனே! |
| நாட்டுக் | கோட்டை | நகரத்தார் | பிரிவினிலே |
| சூரக் | குடியார்கள் | திருப்பணியைச் | செய்ததனால் |
| ஆரம் | அணிந்த | அழகிய | கணபதியின் |
| குடமுழுக்குக் | கோலாகலமாகக் | கொண்டாடப் | படுகிறது |
| குடமுழுக்குச் | செய்தவர்கள் | கண்டவர்கள் | கேட்டவர்கள் |
| எல்லாரும் | இன்புற்று | இவ்வுலகில் | வாழ்கவென |
| எல்லாம் | வல்ல | இறைவன் | கணபதியின் |
| எல்லையிலாத் | திருவருளை | இறைஞ்சி | நிற்கின்றேன் |
| கந்தனுக்கு | முன்பிறந்த | என்றன் | கணபதியின் |
| கணக்கில்லாத் | திருவருளைக் | காலமெலாம் | பெற்றிடுவீர். |

இராம. சிவ. இராமநாதன் M. Sc., B.Ed., C.G.T.
P.G. Asst., S.M.S Hr. Sec School, Karaikudi



# படைப்பு

''சாமிக்குப் படைக்கிறோம். அவசியம் நீ வரணும்!'' என்று அழைத்தான் ராமசாமி, என் நண்பன். சென்றேன். காரணம்? அருமையான விருந்து. கசாப்பு முட்டையோடு பிரமாதமான விருந்து!

படைப்பு வீட்டில் பயபக்தியோடு ராமசாமி படைத்துக் கொண்டிருந்தான். மற்றவர்கள் அனைவரும் அரசியலையும் சினிமாவையும் சலித்து எடுத்துக்கொண்டிருந்தோம்.

எனது நண்பன் இராமசாமியின் பாட்டையா பாட்டி ஆயாள்களுக்குப் படைப்பு. அவர்கள் பயன்படுத்திய தடுக்கில், அவர்கள் உடுத்திய ஆடைகள், அணிந்துகொண்ட நகைகள், விபூதிப்பை முதலியவற்றை வைத்து மலர்களால் சுற்றிலும் அலங்கரித்தார்கள்.

செட்டிநாட்டு விருந்திற்காகவே வளர்ந்து வரும் தஞ்சாவூர் தாட்டெலைகள் மூன்றினைப் பரப்பி அதில் நிறையச் சோறு வைத்துப் பருப்பு ஊற்றி அதன்மேல் நெய்யைத் தழும்ப விட்டார்கள். கத்திரிக்காய் வாழைக்காயைக் குழம்புச் சட்டியிலிருந்து எடுத்து இலையின் வலது பக்கம் வைத்தார்கள்.

''பள்ளயம் போட்டாச்சு. எல்லாரையும் சாமி கும்பிடக் கூப்பிடுங்க!'' என்றார்கள்.

ஜெயலலிதாவை போயஸ் கார்டனிலும் கருணாநிதியைச் சட்டசபை அமளியிலும் விட்டு-விட்டு எழுந்தோம்.

பேச்சு சுவாரஸ்யத்தில் நான் என்னைப் பற்றி அறிமுகப்படுத்திக்கொள்ள மறந்து விட்டேன்.

நான் கல்லூரியில் ஐந்தாண்டுகளை இன்பமாகச் செலவிட்டுவிட்டுக் கடந்த பத்து ஆண்டுகளாக ஒரு வங்கியில் பற்று வரவு வைத்துக் கொண்டிருக்கிறேன்.

நான் நாத்திகனல்லன்; ஆத்திகன்தான். என்றாலும் மூத்தோர்கள் சொன்னார்கள் என்பதற்காக எல்லாவற்றையும் கண்ணை மூடிக்-கொண்டு நம்பிவிடமாட்டேன்.

கடவுள் என்று ஒருவர் இருக்கிறார் என்பது என்னைப் பொறுத்தவரை தவறு. கடவுள் என்பது ஒரு சக்தி என்பதுதான் சரி. மின்சாரம் போல. அதை நாம் மனதில் பிடித்துவைத்துக் கொள்வதற்காக மனிதன் கற்பனையில் படைத்த உருவங்களே கடவுள்களின் சிலைகள். அந்தச் சிலைகளின் அமைப்பில் அழகு மட்டுமல்ல, அருமையான கடவுள் தத்துவங்களும் உண்டு.

அந்த கடவுள் சக்திக்கு உருவமில்லை. எனினும் தத்துவ விளக்கமாக அமைந்த கடவுள் சிற்பங்களைக் கும்பிட்டு வழிபடுவதைக் கூட நான் ஏற்றுக் கொள்வேன்.

ஆனால்... படைப்பு என்கிற பெயரில் இறந்தோரை வழிபடுவது எதற்காக? தேவை-தானா? என்று என்மனம் இன்றும் அலைபாய்-கிறது.

எனக்கு எப்போதுமே அடுத்தவர்களுடைய மனத்தை உடைக்கிற சொற்களைப் பேச மனம் வருவதில்லை. அப்படி ஒரு கல்மனம் வந்தால் படைப்புக்களே தேவையில்லை என்று சொல்லி-விடுவேன்.

கொஞ்சம் நீங்களும்தான் யோசித்துப் பாருங்களேன்.

படைப்பு எதற்கு? இதனால் என்ன பயன்?

வந்த விருந்தைச் சாட்டி வடை, வெள்ளைப் பணியாரத்தைச் சாப்பிடுவதைப் போலப் படைப்பைச் சாட்டி மட்டன் விருந்து சாப்பிடு-கிறார்கள் என்று எங்கள் மாமா அடிக்கடி சொல்வார். என் மனமும் தலையசைக்கும்.

என்னைப் பற்றிய சுயஅறிமுகம் போதும்.

படைப்பு வீட்டை நோக்கி நகர்ந்தேன்.

கும்மென்று சாம்பிராணிப் புகை. பல்வேறு நினைப்புகளில் மிதந்த மனத் துண்டுகளை அந்த வாசனை ஒட்டி இழுத்தது.

எட்டிப் பார்த்தேன்.

நிஜமாகவே மூன்றுபேர் உட்கார்ந்திருப்பதைப்போல அலங்கரித்திருந்தார்கள். மூவருக்கும் முன்பாக மூன்று பள்ளயங்கள். இலை நிறையச் சாதம், பருப்பு, நெய், கத்திரிக்காய், வாழைக்காய், கசாப்பு, முட்டை

என்னுடைய நண்பன்தான் படைத்தான். பள்ளயத்தைச் சுற்றி நீர் விளாவினன். சாம்பிராணிக் காலை எடுத்து மூன்றுமுறை சுற்றினன். தீபக்காலை எடுத்து மூன்றுமுறை தீபம் காட்டினன்.

நன்ருக விழுந்து கும்பிட்டான். விபூதியை தொடப் போனன். ''ய்ஓய்'' என்று பெருஞ் சத்தம். எல்லோரும் அதிர்ந்தோம். திரும்பினேம். உள்ளே ஓடினேம். என் நண்பனது உறவினர் ஒருவர் மேல் சாமி வந்து ஆடுவதாகச் சொன்னர்கள்.

''எங்குஞ்சுகள்ள ஒரு குஞ்சை மட்டும் ஒதுக்கி வைச்சுட்டுப் படைச்சா நா படைப்பை ஒத்துக்குவேனப்பா?''

''ரெண்டு பேருக்கும் கூட்டா வைச்ச தொழில்ல ஏகப்பட்ட நட்டம்...''

''அதெல்லாம் எனக்குத் தெரியும்!''

''அவ வந்து வாய்க்கி வந்தபடி பேசிட்டு போயிட்டா! ரெ்ண்டு பேருக்கும் இப்ப ஆகலை. அவபாட்டுக்கு அவுகவீட்டுச் சாமிகளையெல்லாம் வேண்டிவிட்டுட்டா. இவன் இவன் பங்குக்கு ஒரு ஆட்டம் ஆடீட்டான். கூட்டுநாட்டு இனி இல்லேன்னு ஆயிப்போச்சு. இந்த நெலைமையிலே அவளை எப்படி இவன் போயிக் கூப்பிடுவான்? இவனே மனசு இரங்கிப் போயிக் கூப்பிட்டாலும்... இந்த வீட்டு வாசப்படிய மிதிக்கவே மாட்டேன்னு சொல்லிட்டுப் போன அவதான் வருவாளா!''—நண்பனின் ஆத்தாள் கேள்விகளை அடுக்கினர்கள்.

''சின்னஞ் சிறுசுக வெளங்காம அடிச்சுக் கிட்டதை எல்லாரும் பெருசு படுத்தீட்டீங்க. பரவாயில்லே. அவ இப்ப உள்ளூர்லதானே இருக்கா? நீ போயிக் கூப்பிடு. அவ வருவா. அவ வந்தாத்தான் நான் படைப்பை முழுமையா ஒத்துக்குவேன்!'' என்று சொல்லிவிட்டுச் சாமி மலையேறிவிட்டது.

''அவ இந்நேரம் நாகர்கோயிலுக்குப் போனலும் போயிருப்பா! எதுக்கும் நீ போயிப் பாரேன்!'' என்று வழியனுப்பி வைத்தார்கள்.

''டேய், நீயும் வாடா!'' என்று என்னையும் அழைத்தான்.

காரில் ஏறினேம்.

''உங்க வீட்டுல நடந்த சண்டையெல்லாம் எப்படியோ உங்க சொந்தக்காரருக்குத் தெரிஞ்சிருக்கு. அதுனலதான் சாமி வந்த மாதிரி நடிச்சு, அவரோட கருத்தையெல்லாம் சாமியோட கருத்தாச் சொல்லீட்டாரு போலிருக்கு! அப்படித்தானே?''

''அதுதானில்லே. எங்க வீட்டுச் சண்டை வேறு யாருக்குமே தெரியாது. இவருக்கு எப்படித் தெரிஞ்சுது? சாமிக்கு எல்லாம் தெரியும்னு சொல்வாங்கள்ல? அது நிஜம்தான்!''

''அட போடா! சாமியாவது மாமியாவது! முதலில உன் தங்கச்சி நாகர்கோயில் போயிருச்சா, இல்லே சாமி போகவிடாமத் தடுத்து நிறுத்தி வைச்சிருக்கான்னு பாரு!''

கார் நின்றது.

கதவில் பூட்டு இருக்கிறதா என்று ஆவலோடு பார்த்தேன். என் வாய்க்குப் பூட்டுப் போட்டுவிட்டு அகலச் சிரித்துக் கொண்டிருந்தது கதவு.

இராமசாமி இறங்கினுன்.

அடித்துக்கொண்ட அண்ணனேடு எப்படிப் பேசுவது என்று தயங்கியபடி வந்த சீதா, ''வாங்கண்ணே!'' என்று வழக்கம்போல் கூப்பிடாமல் ''வாங்க'' என்று மட்டும் அரை மனசோடு வரவேற்ருள்.

''ஆமா. நம்ம பாட்டையா பாட்டி ஆயாள்களுக்கு இன்னைக்கு... இப்ப... படைக்கிறது. ஒன் ஆம்பிளையான் பிள்ளைகளைக் கூட்டிக்கிட்டு இந்தக் கார்லயே வந்திரு!''

''சரீ! நானும் பழைய நெனைப்பில நாகர்கோயிலுக்குப் போயிரலாம்னுதான் மத்தியானமே பொறப்புட்டேன். வாழை மரத்துக்கிட்டே பல்லி சொல்லுச்சு! அங்கின பல்லி சொன்னு... வெளியே எங்கேயும் போகப் புடாதுன்னு எம் மாமியா சொல்லுவாங்க. அதுனுலதான் நான் போகமுடியலே. நம்ம படைக்கிற வீட்டுச் சாமிக ரொம்ப சக்தி வாய்ந்ததுன்னு அப்பச்சி அடிக்கடி சொல்லு-வாகள்ல? சரி, வாங்க புறப்படுவோம்!'' என்ருள்.

கார் உறுமியது.

''காக்காய் உட்காரப்...'' என்று தொடங்கினேன். இராமசாமி என் தொடையில் கிள்ளினுன்.

''டேய்! சும்மா கோட்டா பண்ணுதே! போன மாசம் எங்க நாராயணசாமி கோயில்ல படைச்சப்ப... நம்ம கிட்டு மேல சாமி வந்து தெலுங்கு மொழியில பதில் சொன்னுதுடா!''

''நம்ம கிட்டு எப்ப ஆந்திராவுக்கெல்லாம் போனுன்? தெலுங்கு நல்லாப் பேசுவானு?''

''அவனுக்குத் தமிழே ததிங்கிணத்தோம். இதில தெலுங்குல அவனெப்போ பேசுறது?''

''நீதானே அவன் பேசினுன்னே?''

''அவன் பேசலே. அவன் மேல வந்த நாருயணசாமி நாயக்கர் பேசினுர். அவரோட தாய்மொழி தெலுங்குதான். அதுனுலதான் கிட்டு தெலுங்கில பதில் சொன்னுன். அதுக்கு அப்புறம்தான் எனக்குப் படைப்பு மேல ஒரு நம்பிக்கை பொறந்துச்சு!''

''எனக்கு என்னவோ இதிலேயெல்லாம் இன்னும் நம்பிக்கை வரலே!''

''நம்பிக்கை கொஞ்ச நேரத்தில வந்திடும். இப்ப... வீடு வந்திடுச்சு. இறங்கு!'' என்ருன் இராமசாமி.

''அடியவளே! சீதா வந்துட்டாளே! படைக்கிற வீட்டுச்சாமி தலைமாடு காவலா இருக்கும்கிறது எவ்வளவு உண்மை! சரி. வாங்க எல்லோரும் போய்க் கும்பிடுவோம்!, என்று பெரிய மனுஷிகள் உணர்ச்சி வயப்பட்டு வழிபாடு செய்தார்கள்.

சீதா விழுந்து கும்பிட்டாள்.

''சந்தோஷமா இருக்காத்தா! இப்பத்தான் எனக்குப் பூரிப்பா இருக்கு! எங்குஞ்சுக எல்லாம் எப்பவும் ஒத்துமையா இருக்கணும். கெத்தா வாழக் கத்துக்க ஆத்தா! இப்பத்தான் நான் படைப்பை முழுசா ஏத்துக்குறேன்!'' என்று சாமி சொன்னது. விபூதி கொடுத்தது.

நான் விருந்தை நோக்கி நடந்தேன். பரிமாறினுர்கள். ''ஆஹா! என்ன அருமை-யான சமையல்!'' என்று பாராட்டுச் சான்றி-தழை வெளியிடப்போகும் நேரத்தில்—

''படைச்ச பள்ளயத்தில் வைச்சிருந்த கசாப்பு இது. சாப்பிடுங்க!'' என்று கொஞ்சம் பரிமாரினுள் சீதா.

சாப்பிட்டுப் பார்த்தேன். அதில் மட்டும் உப்பில்லை!

'என்ன அதிசயம்! படைத்த உணவில் மட்டும் உப்பில்லை! இது எப்படி? படைப்பை ஒப்புக்கொண்டவர்கள் ஆவியாக வந்து உப்பை மட்டும் சாப்பிட்டுவிட்டார்களோ?'

என்மனம் அலைபாய்வதை நிறுத்திவிட்டது.

வ. தேனப்பன்,
தமிழ் விரிவுரையாளர்,
ஸ்ரீ சேவு. அ. கல்லூரி
தேவகோட்டை.

உ. சிவமயம்

ஏடெழுதிட அன்று கோடேந்திய விநாயகனே
நாடெலாம் சிறக்க நல்வளம் பெருக
பாடலாம் என்றே பணிந்தேன் உன்பாதம்
பாடல் எழுதிடப் பழுதிலாப் பதம்தா! 1

கும்பிட்டுக் கூத்தாடி குருவேயென் றுனையழைத்து
எம்பிட்டுக் கொடுத்தாலும் நிறையாதுன் வயிறென்று
ஒன்றும் கொடுக்கிலேன் என்றாலும் எனக்கு
தும்பிக் கையானே துணைநில்! 2

உலகெலாம் செழித்திட உத்தமர் பெருகிட
பாரெலாம் மகிழ்ந்திட பல்வளம் மலிந்திட
காரெலாம் கூடிக் கனமழை பொழிந்திட
சீர்மிகு விநாயகா செய்வாய் உதவி! 3

உன்தாள் பணிபவர்க்கு உயர்வு உண்டாம்
துன்பங்கள் ஓடிடுமாம் துயரங்கள் மாறிடுமாம்
இன்பங்கள் நாடிடுமாம் இனிமையெல்லாம் சேர்ந்திடுமாம்
கல்மனமும் கனிந்திடுமாம் கவலைகள் மறந்திடுமாம்! 4

பொன் வேண்டேன் பொருள் வேண்டேன் — வேறு
என்ன வேண்டுமென்று என்னிடம் கேட்கின்றாய்
புலமை தருவாய் புகழ் தருவாய்
தலைமை எனக்களித்து தயைபுரிந்து காப்பாயே! 5

நிலைமை உயர்ந்திட நிம்மதி பெருகிட
கவலைகள் மறைந்திட கனிவுகள் பிறந்திட
ஐங்கரனே அரன்மகனே அருமைத் தலைமகனே
பூங்கரம் நீட்டிப் புண்ணியம் அருள்வாயே! 6

தமிழ்த்தென்றல் புலவர். சுப. காளிமுத்து, எம்.ஏ., பி.லிட்.,
நாட்டரசன்கோட்டை.

சிவமயம்

# விநாயகர் 108 மலர் வழிபாடு

அப்பம் உகந்த மகேச போற்றி
அரசு வேம்பிலும் அமர்வோய் போற்றி
அவலும் அமுதென ஏற்பாய் போற்றி
அல்லல் அறுக்கும் அழலே போற்றி
அண்ணா மலையிலும் உள்ளாய் போற்றி
அன்பினுக்கு அடிமை ஆகுவை போற்றி
அமரர்க்கு அருளும் தேவே போற்றி
ஆரம் அறுகிலும் அணிவோய் போற்றி
ஆகம பூசை செய்வோய் போற்றி
ஆற்றங் கரைகளில் அமைவோய் போற்றி 10

ஆதி பராபரை அளித்தவ போற்றி
ஆடும் நாகம் பூண்டவ போற்றி
ஆறு ஆதாரத்து அண்ணலே போற்றி
ஆயிரம் இதழ்கள் விரிப்பாய் போற்றி
இரவும் பகலும் எனையாள்வாய் போற்றி
இடுக்கண் களையும் இளையோய் போற்றி
இசைக்கு ஏற்ப அசைவோய் போற்றி
ஈகைக் குணங்கள் நிறைந்தாய் போற்றி
உலகம் சிவமயம் ஆனாய் போற்றி
உப்பூர் உகந்த உத்தம போற்றி 20

ஊர்த்துவம் ஆடினோர் உளக்கனி போற்றி
எள்ளுப் பொரியும் உள்ளினை போற்றி
ஏறு ஊர்ந்தோன் மைந்த போற்றி
ஏட்டில் பாரதம் தீட்டினை போற்றி
ஐந்து முகங்கள் உடையாய் போற்றி
ஒற்றைக் கொம்பை ஒடித்தவ போற்றி
ஒருமந் திரத்தின் உட்பொருள் போற்றி
ஓங்கார ரூபம் தாங்கினை போற்றி
ஔவைக்குக் கயிலாயம் அருளினை போற்றி
கன்னல் விரும்பும் களிறே போற்றி 30

கற்பக விநாயகக் கன்றே போற்றி
கள்ள விநாயகப் பிள்ளையே போற்றி
கன்னியர் திருமணம் முடிப்பாய் போற்றி
களம்பல கண்ட கணேச போற்றி

கற்றைக் குடுமி வைத்தாய் போற்றி
களபம் பூசும் கரிமுக போற்றி
காமம் தவிர்த்த கடவுளே போற்றி
காவிரி பெருக்கிடக் காரண போற்றி
காலனும் துதிக்கும் கண்ணுதல் போற்றி
காற்றிலும் வேகம் கடப்போய் போற்றி 40

காணா பத்தியத் தெய்வமே போற்றி
காடுடைப் பொடியைப் பூசுவோய் போற்றி
கிருபை செய்யும் கிளர்ஒளி போற்றி
கீர்த்தியில் மிக்கப் பெரியோய் போற்றி
கீழ்மேல் உலகை ஆள்வோய் போற்றி
குரு வடிவான குணபதி போற்றி
குற்றம் தவிர்க்கும் கொற்றவ போற்றி
குறையாச் செல்வம் தருவாய் போற்றி
கூரிய தந்தம் கொண்டாய் போற்றி
கூரிய மதிக்கு உரியவ போற்றி 50

கூத்து உகந்து ஆடுவோய் போற்றி
கெஞ்சும் அடியவர் தஞ்சமே போற்றி
கேள்வி ஞானம் ஈவாய் போற்றி
கௌரி சங்கரன் புதல்வா போற்றி
ஞான குருவாய் விளங்குவை போற்றி
சக்திக்கு இடமும் நல்கினை போற்றி
சமாதி யோகம் உறைபவ போற்றி
சாத்திரப் பொருளாய்த் திகழ்வாய் போற்றி
சரணம் சந்தனம் உவப்பாய் போற்றி
சார்ந்தவர் நெஞ்சில் நிலைப்பாய் போற்றி 60

சித்தர்கள் போற்றிய சிவனே போற்றி
சித்தி புத்தியைச் சேர்ந்தாய் போற்றி
சித்தம் அழகிய செம்மலே போற்றி
சிந்தித்தவர் பெறும் செந்தமிழ் போற்றி
சுகம்பல கொடுக்கும் சுந்தர போற்றி
சூரனை வென்ற சூக்கும போற்றி
செந்நிற மேனிச் செல்வா போற்றி
செட்டி முருகனின் சோதர போற்றி
செங்கண் திருமால் மருக போற்றி
சேவிப்பவர்க்கு அருள் சேவக போற்றி 70

சேவடி சென்னியில் சூட்டுவை போற்றி
சேனைகள் யாவிலும் தலைவ போற்றி
சைவர் போற்றும் சாந்தமே போற்றி



சொக்கர் அருளிய சொரூப போற்றி
சோதி உருவும் அடைவாய் போற்றி
சோதித்து அருளும் சுடரே போற்றி



தந்தைதாய் உலகெனச் சாற்றினே போற்றி
தவமுனி வோர்க்கருள் தத்துவ போற்றி



தாயினும் நல்ல துணேயே போற்றி
தாழ்செவி நீள்முடி தயாபர போற்றி 80



திகடச் சக்கரத் தெளிவே போற்றி



திக்குக் கஜமென திகழ்வாய் போற்றி
தீர்த்தார் குளத்துத் தேசிக போற்றி



தேரில் அச்சை முறித்தவ போற்றி
தேறல் அருளும் செங்கை போற்றி



தேசங்கள் தோறும் உதித்தவ போற்றி
தொண்டர் உளத்துத் தூமணி போற்றி
நம்பிக்கு அருளிய நாயக போற்றி



நீத்தார்க்கு முக்தி நிறைப்பவ போற்றி
படிப்பு அறிவிக்கும் பரம போற்றி 90



படமாடும் கோவிலும் பரவினேய் போற்றி



பரமரர்க்கு உகந்த ராயனே போற்றி
பிள்ளைகள் உள்ளம் கவர்ந்தாய் போற்றி



பிள்ளையார் நோன்பின் பேரொளி போற்றி
பேதைமை தவிர்க்கும் பேராள போற்றி



பேராயிரம் கொண்ட பெரும போற்றி
மதயானே மத்தள வயிறேய் போற்றி



மரகத விநாயக மணியே போற்றி
முக்கண் குடும்ப முன்னவ போற்றி



மூலக் கனலின் முதல்வா போற்றி 100



மூஷிக வாகனம் ஊர்ந்தோய் போற்றி



வலம்புரி விநாயக வள்ளலே போற்றி
வல்லபை அல்குலே அடைத்தனே போற்றி
விடலைக் காய்கள் விரும்பினே போற்றி



விரித்த கரங்கள் ஐந்துளாய் போற்றி
வெள்ளை எருக்க வேருளாய் போற்றி



வேடம் பலப்பல எடுத்தவ போற்றி
வையக மெய்ப்பொருளேபோற்றி போற்றி 108



ஆக்கம். சிவத்திரு. குப. சொக்கலிங்கம்
என்ற கருப்பையா.



நாட்டரசன் கோட்டை.



# பிரதோஷ வரலாறு

தேய்பிறைத்திரயோதசி பதின்மூன்ரும் திதி பிரதோஷம் எனப்படும். அன்று சிவபெருமாளை வழிபடுவது மிகவும் சிறப்பாகும்.

(ப்ர=முந்திய. தோஷம்=இரவு) அஸ்தமனத்துக்கு முந்திய இரவுப்பகுதி என்பது பிரதோஷம் எனப்படும். அஸ்தமனத்துக்கு முன்பு இரவே இல்லையே பகலல்வா எனலாம். பாற்கடலில் அமுதுகடைந்தபோது ஆலகால விஷத்தைக் கண்டு அசுரரும்தேவரும் பிற கடவுளரும் அஞ்சி நின்றனர். அந்தக் கொடிய நஞ்சைச் சிவன் ஏற்று விழுங்கினன். இதனல் பாதிக்கப் படலாம் என்ற அய்யம் இருந்தது. நந்தி தேவரைத் தவிர யாவரும் நடுங்கினர்.

சிவன் தமக்கு ஒன்றும் ஆகாது என்பதைப் பிறருக்கு அறிவிப்பதற்காக நந்தியம் பெருமாளின் (மத்தகத்தில்) கொம்புகளுக்கு மத்தியில் திரு நடனம் புரிந்தார் அனைவரும் மகிழ்ந்தனர். அது நிகழ்ந்த நேரம் பிரதோஷ நேரமாகும். இறைவனின் நீலநிறக்கண் இருளாக நிற்பதாலும் இது பிரதோஷமாயிற்று

இப்பிரதோஷ விழா வழிபாடு மிகவும் சிறந்தது. அன்று முழுவதும் உபவாசமிருந்து அஸ்தமனத்திற்கு முன், மூன்று நாழிகை அளவில் சிவனையும் நந்தியையும் வழிபட்டு வில்வமும் காப்பரிசிப் படையலும் செய்து அப்பிரசாதத்தையே உண்ணவேண்டும். உபவாசம் இருக்கும்போது மவுனம் கொள்ளுதலும் மிகச் சிறப்பு, இச்சிறப்பான வழிபாட்டை மாதம் ஒரு நாள் அன்றி, இருநாள் பெரும் ஆசையால் தேய்பிறை மட்டுமன்றி வளர்பிறைத்திரயோதசியிலும் இப்போது கொண்டாடுகிருர்கள்.

நஞ்சுண்ட நீலகண்டன் நந்தி மத்தகத்தில் நடமாடிய பிரதோஷ நாள் சனிக்கிழமையாகத் தான் இருந்தது. அதனுல் சனிக்கிழமைகளில் பிரதோஷம் வந்தால் பஞ்சாங்கத்தில் சனி மகா பிரதோஷம் என்று போட்டிருப்பார்கள். சனி பகவானுக்குத் தனிச்சன்னதி இருந்து, சனிப் பிரதோஷத்து அன்று சனீஸ்வரனை வழிபடுதலும் சாலச்சிறந்தது.

மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோயிலில் ஒவ்வொரு பிரதோஷத்து அன்றும் கோயில் கொள்ளாத கூட்டம் நாதஸ்வரம். நான்கு வேதபாராயணக் கோஷ்டிகள். (அவர்களைச் சுற்றி வணங்கும் பெண்கள் கூட்டம் காணத் தக்கது) தேவார ஓதுவார்கள் பாடல்கள் பாட சுவாமி பிரகாரத்தில் வலம்வரும்போது காணும் காட்சி கண் கொள்ளாக்காட்சியாக இருக்கும் நாஸ்திகனையும் ஆஸ்திகன் ஆக்கும் வண்ணம் சிறப்புடன் பிரதோஷ தேவர் நந்தியுடன் வலம் வருவார். பிரகார நான்கு மூலைகளிலும் சந்நிதி முன்பும் தீபாராதனை நடைபெறும்.

என்றும் அழியாதவனுய்ப் பிரமம் கபாலம் ஏந்திய இத்திருக்கோயிலில்தான் இப்பிரதோஷ வழிபாடு மிகவும் சிறந்தது.

இராமன் சீதையைத் தேடியபோது சித்தியுண்டாகுமென்று வாழ்த்தியவனும், சீதையுடன் இராமன் வந்து வணங்கப் பெற்றவனும் மச்சாவதாரத்தில் மீண்டவேதங்கள் வழிபட வேத புரியாக்கியவனும் இந்தக் கபாலியேதான் அன்பர்கள் வேண்ட எலும்பைப் (பூம்பாவை) பெண்ணுக்கியவனும், பிரதோஷம் கொண்டாடும் பெருமானும் இவனே (கபாலியே)

வீர. மு. வீர ரம. அண்ணுமலை





# கண்ணபிரானுக்கு அருள்தந்த கணேசர்



இந்த உலகம் 'உடையான்' என்றும் 'இல்லான்' என்றும் இருவகையாய்ப் பிளவு பட்டு நிற்கிறது. உண்மையில் உடையவன் யார்? இல்லாதவன் யார்?

நாம் வசதிபடைத்த பணக்காரனை உடையான் என்று வருணிக்கிறோம். ஆனால் வள்ளுவப் பெருமான் அறிவுடையானையே உடையான் என்று கொள்ளுகிறார்; அஃது இல்லாத பேதையை இல்லான் என்று தள்ளுகிறார் !

அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்புடைய ரேனும் இலர். — திருக்குறள்

உடைமைகள் பலவகையாய் உள்ளன. ஆயினும் அறிவுடைமைதான் மேலான உடைமை என்று இதனால் உணரலாம்,

பெரியோர்கள் அறிவை மூன்று வகையாய்ப் பிரித்துப் பேசுவார்கள். நூலறிவு, நுண்ணறிவு, அனுபவ அறிவு என்பன அவை.

இம்மூன்றனுள் நுண்ணறிவே உயர்ந்தது. காட்டுவதாலும் ஊட்டுவதாலும் யாரும் இதை கைக்கொள்ள முடியாது. கருவிலே திருவாய் வந்து அமையும் இதனை,

நுண்ணிய நூல்பல கற்பினும், மற்றும்தன்
உண்மை அறிவே மிகும். — திருக்குறள்

என்பார் வள்ளுவர்.

தம்முடைய நுண்ணறிவால் கண்ணபிரான் மூவுலகையும் கட்டியாண்டார். இந்த அறிவுச் செல்வத்தை இவருக்கு யாரே அருளினர் ?

இடையர் சிறுபாலைத் திருடி கொடுபோக
இறைவன் மகள்வாய்மை அறியாதே
இதயம் மிகவாடி உடைய பிளைநாத
கணபதியென் நாமம் முறைகூற
அடைய லவர்ஆவி வெருவ அடிகூர
அசலும் அறியாமல் அவரோடே
அகல்வ தெனடாசொல் எனவும் முடிசாட
அறிவருளும் ஆனை முகவோனே!

— 'விடமடைசு' திருப்புகழ்

[சிறுபாலை - சிறிய அளவினதான பால், இறைவன் மகள் - உக்கிரசேனன் மகளான தேவகி, பிளைநாத - பிள்ளைநாதன், கணபதி அடையலர் - பகைவர், அசல் - பக்கத்தில் உள்ளவர்]

நம்மில் பலருக்குக் குடும்பம் ஒரு சிறைக் கூடம் போல உள்ளது. ஆனால் உக்கிரசேன மகாராஜாவின் புதல்வி தேவகிக்கோ சிறைக் கூடம்தான் குடித்தனம் என்று ஆனது!

அண்ணன் கம்சனுடைய கொடுங்கோன்மையால், அடுத்தடுத்து, ஏழு பிள்ளைகளை இவள் பறிகொடுத்தாள். எட்டாவதாக வந்த பிள்ளை கோகுலத்தில் யசோதை இல்லத்தில் வளர்வதை இவள் நன்கு அறிவாள்.

கண்ணபிரான் இடையர் மனைகளில் புகுந்து வெண்ணெய் திருடினார். இதனால் ஆய்ச்சிகளிடம் பிடியுண்டும் அடியுண்டும் வருந்தினார். தகவல் அறிந்த தேவகி பெரிதும் சஞ்சலம் அடைந்தாள்.

தேவகி கணபதி உபாசகி. ''ஓம் கம் கணேசாய நம'' என்ற மூலமந்திரம் சொல்லி எப்போதும் கணேசரையே தியானித்துவந்தாள் இந்த மாதரசி! ''மகாபிரபுவே, கணேசா, நீதான் என் மைந்தனைக் காத்தருள வேண்டும்'' என்று வேண்டினாள்.

இவளது பிரார்த்தனைக்கு இரங்கியே கணபதி எப்போதும் கண்ணபிரான் பக்கல் நின்றருளினார். இடைவிடாது அருள்புரிந்து வந்தார்.

பூதனை, சகடாசுரன், திருணவர்த்தன், கம்சன், சிசுபாலன், தந்தவக்கிரன் முதலான அசுரர்கள் கண்ணபிரானால் வதமானார்கள். உத்தவர், குசேலர், தருமர், சகாதேவர், சாம்பவான் முதலான அருளாளர்கள் பதம் பெற்றார்கள்.

''துஷ்ட நிக்ரஹம் சிஷ்ட பரிபாலனம்'' என்னும் இரண்டையும் கண்ணபிரான் நடத்தவில்லையாம்; அவருள் எழுந்தருளிய கணேசரே நடத்தினாராம்!

''ஞானனும் ஞானம் உத்தமம்'' என்பது பகவத்கீதை. கண்ணபிரான் போதனை. கண்ணபிரானுடைய போதனைகளும் சாதனைகளும் கணேசர் அனுக்கிரகங்களே என்ற அரிய செய்தியை நாம் அருணகிரிநாதரிடமிருந்து அறிந்து கொள்கிறோம்.

பேராசிரியர், அருட்கவி
கு. செ. இராமசாமி, எம்.ஏ., சிவகங்கை



உ
சிவமயம்
ஸ்ரீ கற்பக விநாயகர்துணை



# பிள்ளையார்

(வெண்பாக்கள்)

ஆனைத் திருமுகத்தை அன்பாரப் போற்றிடுவார்
ஈனம் மறையும்; இன்பமெனும் — தேனருவி
பொங்கி வழிந்துவரும்; பூவுலகில் மாண்பேறித்
தங்கமென வாழ்வார் தழைத்து. 1

கந்தன் மணம்புணரக் கைகொடுத்த நாயகனைச்
சொந்தம் எனப்பற்றும் தூயவர்கள் — சந்ததமும்
மேனி நலங்கண்டு மேன்மைப் புகழ்கண்டு
கோன்எனவே வாழ்வர் கொழித்து. 2

மறையின் முதலாவான்; மண்ணைப் புரக்கும்
இறையின் நடுத்தலைமை ஏற்பான்; — நிறைபெருமை
ஊட்டும் கடவுள் உயர்நிரலில் கடையாவான்
கோட்டுப் புகர்முகத்துக் கோ. 3

உறுப்பும் உதவி உளம்கனியும் பண்பை
மருப்பின் நிலையால்இம் மண்ணில் — விருப்பேறிக்
காட்டும் பெருமானைக் காதலுடன் வாழ்த்தும்பா
ஊட்டும்சீர் எல்லாம் உவந்து. 4

நெஞ்சும் மலராகும்; நிம்மதியாம் பூந்தென்றல்
கொஞ்சி விளையாடும்; கோபுரத்தில் — விஞ்சும்
கலசம்என வாழ்வில் கவின்பெறலாம்; கைம்மா
மலைஇறையைச் சார்ந்து மகிழ்ந்து. 5

பாட்டி மகிழக் கயிலைப் பதிசேர்த்து
வாட்டந் தணித்தபெரு வள்ளலவன் — நாட்டமுடன்
தன்னடியில் தாழும் தகவுடையார் இல்லத்தில்
சொன்னமழை பெய்வான் தொடர்ந்து. 6

முன்னைப் பழவினையின் மூத்த முடிச்சவிழ்த்தே
அன்னையெனத் தாங்கி அரவணைக்கும் — மன்னவனைக்
கற்பகத்தைப் போற்றிக் கசிந்துருகும் காதலினால்
பொற்பனைத்தும் தோன்றும் பொலிந்து. 7

இன்பம் வரவாகும் எங்கும் புகழ்ஏறும்
துன்பம் செலவாய்த் தொலைந்தழியும் — மன்பதையில்
ஏக்கம் இலையாகும் எண்ணம் களிப்பாகும்
காக்கும்நம் கற்பகத்தான் கண். 8

கனவை நனவாக்கிக் கைகொடுக்கும் தேவை
முனிவறியாக் கற்பகமாம் முத்தை — நினைவிருத்தி
என்றும் தொழுவார்கள் இன்பக் கடல்குளித்தே
வென்றி புனைவர் விரைந்து. 9

ஏற்றம் விளையும்! இனிமை மிகவிரியும்!
தோற்றம் அழகாய்ச் சுவைவழங்கும்! — நாற்றுக்(கு)
உரத்துடனே கற்பகத்தான் நீராய் உதவி
வரத்தைப் பொழிவான் மகிழ்ந்து. 10

—கவிஞர் இராகவன்முத்து B.Sc., DipGeog., CAIIB
13/14 கொட்டமடக்கியார்தெரு, காரைக்குடி-1

! ! ! !

! ! !

! !

!

# மழை

வானத்திற்கும் பூமிக்கும்
போட்டிருக்கும் இயற்கையின் பாலமே!
உன் வழியாகவே எங்கள் வறுமைகளை
வழியனுப்பி வைத்துவிட்டு
வாழ்க்கையினை இறக்குமதி செய்கிறோம்.

நீ மழலை பூமிக்குப் பாலூட்டும்போது
மானுடம் தம் இல்லங்களின்
கதவுகள் மூடிக் கௌரவிக்கின்றது.
எல்லையில்லாத உன் கருணையைப் பாராட்டியல்லவா
சூரியன் கூட உனக்கு
வானவில் மாலைசூட்டத் தயாராகிறது.

எங்களுக்கெல்லாம்
வெண்கொற்றக் குடைபிடித்து
வீதி உலா வருவதில் விருப்பமில்லை
உன் மேகக் குடைபிடித்து
நனைய நனைய வருவதில்தான் கொள்ளை ஆசை

கடலைப்போல் - இருக்கிற இடங்களில்
தாராளமாகவே அள்ளி
பூமியைப்போல் - இல்லாத இடங்களில்
தானம் செய்வதெல்லாம் உனக்குப் பெருமைதான்.

சொர்க்கத்தின் பாதமாய்
நீ நீண்டு தொடும்போது
இந்த அகலிகைப் பூமிக்குத்தான் எத்தனை உயிர்ப்பு!

பூமியாழில் நீ தந்தியாகும்போது
எழும் ராகத்தில்
யாழே அல்லவா உருகிப் போகிறது.

இந்தப்பூமி அட்சயப்பாத்திரமாக ஆகியிருப்பதே
ஆதிரைப் பருக்கைகளாய் நீ முதலில் விழுந்ததால்தான்

நீ
உழைப்பின் கருவறை
நாகரிகத்தின் பிறப்பிடம்
மண்ணையும் விண்ணையும் இணைக்கும் மங்கலநாண்
பூமியின் தொட்டில்
பூமியின் மானம்காக்கப் பச்சை ஆடை நெய்யும்நெசவாளி

நீயும் விலைவாசியும் தராசின் இரு தட்டுகள்
நீ இறங்கினால் அது ஏறும்
நீ ஏறினால் அது இறங்கும்
ஏறு... இமை மூடாமல் ஏறு...

ஒன்று கேள்:
வானப் பெண்ணின்
நட்சத்திரக் கிழிசல் ஆடைகண்டு மனமிரங்கி
அழுகின்றாய் ...... சரிதான்
எங்கள் வாழ்க்கை கிழிபட்டுக் கிடக்க
'சிரபுஞ்சி' களுக்கு மட்டும்
மகுடம் சூட்டிவிட்டுப்போக உன்னால் எப்படி முடிகிறது?

பருவங்களின் ஊற்றுக்கண்ணே !
பருவத்தே – பாலைராகம் பாடிக்கொண்டு எங்கே போய்விடுகிறாய்?

எங்களுக்கு வெள்ளமும் வறட்சியும் ஒன்றுதான்...
சகாராக்களின் அன்பளிப்பாய் மணல்மூடைகள்
இமயங்களின் அன்பளிப்பாய் பனிப்பாளங்கள்
பயனேதும் உண்டோ? சொல்.

உன்னை நம்பி - எங்கள் உழவர்கள்
ஆடிப்பட்டத்தில் விதைக்கப் புறப்படுகிறார்கள்.
நீயோ
அவர்கள் நம்பிக்கையில் மண்ணைத்தூவி விட்டு
பாலைவனங்களில் ஒட்டகம் மேய்க்க அல்லவா போய்-விடுகிறாய்.

மாதம் மூன்று முறை வந்தாயாமே.
இப்போதுஐந்தாண்டுக்கொருமுறை அல்லவாவருகிறாய்
தேர்தலைப் போல.
எங்கள் வாழ்க்கை எப்படித் தேறும்?

நீ போர் வேகத்தில் புறப்பட்டு வந்தாலும்
எங்கள் உயிர்ப்பூக்கள் உதிர்ந்து போகலாம்
நீ நத்தை வேகத்தில் நடைபயின்றாலும்
எங்கள் வாழ்க்கை ஒடுங்க நேரலாம்.

எனவே —
ஆவேசம் இன்றியும் அதிதாமதம் இன்றியும்
உன் வலதுகாலை எடுத்துவைத்து
மழையே! வா!

எங்கள் வறண்ட மண்ணில் வளத்தைச் சேர்க்க
எங்கள் வாழ்க்கையில் வசந்தம் சேர்க்க
எங்கள் தாகம் தணிக்க —
மழையே! வா! வா!



**டாக்டர் ச. ஆறுமுகம்,**
தமிழ்ப்பேராசிரியர்,
ஸ்ரீசேவுகன் அண்ணாமலை கல்லூரி
தேவகோட்டை.

# பேறுதரும் பிள்ளை



நாட்டை ராகம்] [ஆதிதாளம்

பல்லவி

தேசிக விநாயகனைத் துதிமனமே — அவன்
திருவரு ளாலே - நிம் மதிவருமே — தினமே
(தேசிக)



அனுபல்லவி

வாசமுள்ள மலராலே மாலைதொகுத்து — அன்பு
வள்ளல்அவன் பெயராலே இசைவடித்து — மனமே
(தேசிக)

சரணம்

மூலமும் முதற்பொருளும் ஆனபிள்ளை — புவி
மூன்றும் மணக்கவந்த ஞானமுல்லை
காலமும் கணக்குகளும் கடந்தஎல்லை — அதன்
கால்களில் சூட்டுவோம் அறுகம்புல்லை — மனமே
(தேசிக)

ஐந்துமுகன் பெற்றெடுத்த ஆனைமுக வா — அந்த
ஆறுமுகன் தமையன் - திருமாலின் மருகா
எந்தையும்என் தாயும்நீயே அருள்புரிவாய் — ஐயா
எண்ணிரண்டு பேறுகளும் நீதருவாய் மனமே
(தேசிக)

பேராசிரியர் அருட்கவி
கு. செ. இராமசாமி, எம்.ஏ., சிவகங்கை

# கடவுளைக்  காணலாம்

வேதத்தின் சாரத்தை எளிய முறையில் பாமரரும் அறியும் வண்ணம் நமக்கு எடுத்துச் சொல்லுவதே இதிகாசங்கள். காமத்தின் வயப்பட்டு தனது நாடு, சுற்றம், வலிமை அனைத்தையும் இழந்து இறந்தான் இராவணன், சூதின் வயப்பட்டு தன்னையும் தனது சகோதரர்களையும் மனைவியையும் இழந்து அல்லல் பட்டான் தர்மன். ஆகவே காமமும், சூதும் அழிவுப்பாதைக்கு அழைத்துச் செல்லக் கூடியன என்பதனை இதிகாசங்கள் நமக்கு உணர்த்துகின்றன.

சகுனியின் வஞ்சகத்தாலும் விதியின் வலிமையினாலும் சூதாடி திரௌபதையையும் சகோதரர்கள் அனைவரையும் இழந்து செய்வது அறியாது திகைத்து இருக்கின்றான் தர்மன். அரசசபையில் துட்சாதனன் திரௌபதையின் துகிலை உரிய முயற்சிப்பதும் அதனைக்கண்டு துரியோதனனும் மற்றுமுள்ளவர்களும் எள்ளி நகைக்கவும், பாண்டவர்கள் வீணே வீற்றிருப்பதும், திரௌபதை கிருஷ்ணபகவானை பிரார்த்தனை செய்து துன்பத்திலிருந்து மீள்வதும் மகாபாரதத்தில் வரும் முக்கிய நிகழ்ச்சியாகும்.

**சாரம் :-** திரௌபதை என்பது நமது ஆன்மாவையும், பஞ்சபாண்டவர்கள் என்பது கண், காது, மூக்கு, வாய், மெய் என்ற நமது ஐந்து புலன்களையும், துட்சாதனன் என்பது உலகில் நமக்கு ஏற்படும் துன்பங்களையும் துரியோதனனும் மற்றவர்களும் நம்மைச் சுற்றியுள்ள சுற்றத்தார்களையும் குறிக்கும்.

திரௌபதை என்ற ஆன்மா துட்சாதனன் என்ற உலகத்துன்பத்திற்கு ஆளாகின்றது. அவ்வாறு ஆன்மா துன்பப்படும்போது துரியோதனனும் மற்றவர்களும் ஆகிய சுற்றத்தார்கள் துன்பத்தைப் போக்க முயற்சிக்காமல் கைதட்டி கேவலப்படுத்துகின்றனர். ஆன்மாவுக்கு சொந்தமான பஞ்சபாண்டவர்கள் என்ற ஐம்புலன்களும் விதிவசத்தால் கையால் ஆகாத சிரம நிலைக்கு ஆளாகியுள்ளன. ஆகையால் அவைகளாலும் ஆன்மாவுக்கு ஏற்பட்ட துன்பத்தைப் போக்க இயலவில்லை. ஆனால் உலக கஷ்டங்களோ ஆன்மாவை விடுவதாக இல்லை. இந்நிலையில் தனது சுற்றமும், தனது புலன்களும் நிலையற்றவை என்பதை ஆன்மா அறிகிறது. எனவே தன்னுடைய இந்த இக்கட்டான நிலையை உணர்ந்த ஆன்மா இனி எல்லாம் வல்ல இறைவன் ஒருவனாலேயே தனது துன்பத்தைப் போக்க இயலும் என உணர்கிறது உடனே பகவான் கிருஷ்ணனை ஒருமையுடன் பிரார்த்தனை செய்கின்றது. பகவானும் ஆன்மாவுக்கு ஏற்பட்ட துன்பத்தைப் போக்கி அனுக்கிரகம் செய்கின்றார்.

ஆகவே துன்பங்கள் ஏற்படும் காலத்து சுற்றத்தை நம்பி ஏமாறுவதை கைவிட்டு இறைவனை ஒரே மனத்துடன் பிரார்த்தனை செய்யுங்கள். இறைவன் நிச்சயம் அருள்புரிவார் கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்பது வாக்கு.

K.N. ராக்கப்பன் நாட்டரசன் கோட்டை



## நாட்டரசன்கோட்டை
## தீர்த்தார்குளம் தேசிகவிநாயகர்

மண்ணில் வாழும் மாந்தர்தம்
மனத்திற் கினிய வாழ்விற்கே
கண்ணால் அருளை வழங்குகிற
கண்ணாத் தாளின் திருத்தலமாம்
எண்ண எண்ண இனிக்கின்ற
இராம காதை தான்தந்த
மன்னன் கம்பன் துயில்நகராம்
வளநாட் டரசன் கோட்டைநகர்! 1

சூரக் குடியார் பலர்கூடித்
தும்பிக் கையான் துணைநாடி
ஆர அமரப் பொருள்தேடி
அமைத்தார் கோவில் இசைபாடி
வார ணத்துப் பிள்ளைஉனை
வாழ்த்த வந்தோம் துணைநாடிக்
கார ணத்துக் கற்பகமே
காப்பாய் காப்பாய் அற்புதமே! 2

தீர்த்தார் குளத்தின் கரையினிலே
திருவார் அருளைப் பொழிகின்ற
மூர்த்தி நீதான் தேசிகனே
மூவா மூல முதற்பொருளே!
பார்த்தால் போதும் கடைக்கண்நீ
பாவ மூட்டை அவிழ்ந்தோடும்
வேர்க்க நின்றேன் சன்னதியில்
வினைகள் நீங்க அருள்புரிவாய்! 3

உன்றன் பேரை ஓரறிஞன்
உவந்தே தனது பிள்ளைக்கே
அன்றே வைத்துப் புகழ்கொண்டான்
அழகுக் கவிதை மணிதந்தாய்
மன்றந் தோறும் பாராட்ட
மணிபோல் தமிழை யான்பாடத்
தென்றல் போலே இன்னருள்நீ
செய்வாய் செய்வாய் விநாயகனே! 4

உன்னைச் சுழியாய் முதலெழுதி
உயரு கின்றார் நகரத்தார்
பொன்னைப் பொருளை நீதந்தே
புகழாம் மலைமீ தேற்றுகிறாய்!
கண்ணைப் போலக் கருதிநிதம்
காக்கும் தெய்வம் நீயன்றோ
மன்னா உன்னைப் பணிகின்றோம்
மணக்கும் வாழ்வை அருள்வாய்நீ! 5

அழகாபுரி இளங்கோவன் B.LIT., B.Ed., D.I.T.
நகரத்தார் மேனிலைப்பள்ளி - தேவகோட்டை



# சுவாமியே சரணம் ஐயப்பா

நம் நகரத்தார் பெருமக்கள் பெரும்பாலும் ஆஸ்தீகப் பெருமக்களே. சிவனை முக்கிய தெய்வமாக கொண்டு ஆச்சிமார்களும் செட்டியார்களும் உபதேசம் கேட்டுக்கொண்டு தினமும் சிவபூஜை செய்து வருகிறார்கள். சிவபதவி அடைவதற்குள் ஒரு முறையாவது காசிக்கு சென்றுவருகிறார்கள். விஷ்ணுவை முக்கிய தெய்வமாகக் கொண்டு திருமண் அணிந்து ஸ்ரீரங்கம், திருக்கோஷ்டியூர் ராமேஸ்வரம் சென்று நம் ஆச்சிமார்கள் தெய்வ வழிபாடு செய்து வருகிறார்கள். குன்றினிலிருக்கும் குமரனை முக்கியத் தெய்வமாகக் கொண்டு அறுபடை வீடுகளுக்கும் பாதயாத்திரையாக கடும் விரதம் இருந்து காவடி தாங்கி நம் நகரப் பெருமக்கள் சென்று வருகிறார்கள். சக்தியை முக்கியத் தெய்வமாகக் கொண்டு பல நோன்புகள் செய்து வருகிறார்கள். நம் நகரத்தார் வட்டகை என்று அழைக்கப்படும் எல்லா ஊர்களிலும் சிவன் கோயில், பெருமாள் கோயில், பிள்ளையார் கோயில், அம்மன் கோயில், ஐயனார் கோயில் என்று கோயில்கள் கட்டி அக்கோயில்களுக்குள் அனைத்து தெய்வங்களையும் மூர்த்திகளாக பீடங்களில் அமைத்து வழிபாடு செய்து வருவதை யாரும் மறுக்க முடியாது. நம் வட்டகை ஊர்களில் மட்டுமல்லாமல் இந்தியாவில் உள்ள அனைத்து புண்ணியஸ்தலங்களிலும் மலேயா, சிங்கப்பூர், பர்மா, இலங்கை, அமெரிக்கா போன்ற வெளிநாடுகளிலும் கோயில்கள் அமைக்க நம் நகரத்தார் பெருமக்கள் பெரிதும் உதவி இருப்பது எல்லோரும் அறிந்த ஒன்றாகும். கோயில்களை கட்டிவிட்டு நமக்கென்ன என்று இருக்காமல், அவ்வித புண்ணியஸ்தலங்களில் நகரவிடுதிகளை அமைத்து வருடம்தோறும் இறைவழிபாடு காலங்களில் அங்கு சென்று இறைவனை வழிபட்டு, மண்டகப்படி அமைத்து அவைகளில் கலந்துகொண்டு பொருள் உதவி செய்து நாம் ஆஸ்திகர்கள்தான் என்று இன்றும் நிரூபித்து வருகிறோம்.

எதிலும் விதிவிலக்கு உண்டு. அந்த அடிப்படையில் நாஸ்திகர்கள் என்று சொல்லிக் கொள்பவர்கள் நம்மிலும் உண்டு. அத்தகைய நண்பர்களுக்காகத்தான் இந்தக் கட்டுரையை எழுத ஆரம்பித்தேன். தெய்வம் இதுதான், இப்படித்தான் இருக்கும் என்று யாராலும் விளக்கிக் கூறமுடியாது. நம் முன்னோர்கள் கூறியதுபோல தூணிலும் இருக்கும், துரும்பிலும் இருக்கும். அங்கெங்கு எனாதபடி எங்கும் நிறைந்திருக்கும். இந்த உலகத்தையும் அனைத்து கோளங்களையும் ஒரு சக்தி தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்துள்ளது என்று அறிவியலறிஞர்கள் கூறுகிறார்கள். அந்த சக்தியைத்தான் இந்துக்கள் அவர்கள் விருப்ப தெய்வங்களாக பல பெயர்களில் வழிபடுகிறார்கள். கிறிஸ்துவர்கள் கடவுள் தூதர்கள் என்று பெயர்கள் கூறி வழிபடுகிறார்கள். முஸ்லீம்கள் உருவமில்லா அரூபசக்தி என்று வழிபடுகிறார்கள் நாஸ்திகர்கள் உயிருள்ள மனிதர்களை தெய்வமாக மதித்து அவர்கள் சொற்படி நடந்து வழிபாடு செய்கிறார்கள். மொத்தத்தில் ஒரு சக்தி உள்ளது என்று அனைவரும் ஒப்புக்கொள்கிறார்கள்.

ஆஸ்திகனுக்கு கடவுள் நம்பிக்கை உண்டு. ஆனுல் மற்றவற்றில் நம்பிக்கை இருக்காது. எதனையும் யோசித்துத்தான் செய்வான். இந்த இந்த காலங்களில் இதைச் செய்ய வேண்டும் இந்த இந்த இடங்களில் இப்படித்தான் நடந்து கொள்ள வேண்டும், ஒரு காரியத்தைச் செய்தால் அதனுல் விளையும் நன்மை, தீமை என்ன என்று ஒவ்வொன்றையும் யோசித்தே செய்வான். பிள்ளையாருக்கு தோப்புக்கரணமும் முருகனுக்கு காவடியும், சிவனுக்கு விபூதியும், பெருமாளுக்கு நாமமும் என்று பாகுபடுத்தி அந்த அந்த இடத்திற்கு தக்கவாறு நடந்து கொள்வான். ஆனுல் நாஸ்திகனுக்கு கடவுள் நம்பிக்கை மட்டும் இல்லை. மற்ற எல்லாவற்றையும் நம்பி உடனே செய்வான். கோயிலை இடி, பக்தர்களை கேலிசெய் என்று தலைவன் உத்திரவிட்டால் உடனே செய்வான். அதனுல் அவனுக்கு ஏற்படும் நன்மை தீமைகளை யோசிக்கமாட்டான். ஒருவன் கடவுள் உண்டு என்று நம்பி நடந்துகொண்டால் அதனுல் நாஸ்திகனுக்கு விளையக்கூடிய தீமை என்ன? நாஸ்திகன் வருமானம் குறைந்துவிடுமா ? நாஸ்திகன் குடும்பம் அழிந்துவிடுமா ? இந்த இடத்தில் நம் முன்னோர்கள் முன்யோசனையை நாம் பாராட்டாமல் இருக்கமுடியாது. எங்கே நம் பேரன் பேத்திகள் நாஸ்திகர்களாக மாறி விடுவார்களோ என்று கருதி ஒவ்வொரு செட்டியார் வீடுகளிலும் சாமி அறை என்று ஒன்றை ஏற்படுத்தி நம்கண் முன்னுல் வாழ்ந்து தெய்வமாகி உள்ள முன்னோர்களுக்கு பேழைப் பெட்டி வைத்து ஒவ்வொரு வருடமும் படைத்து வழிபாடு செய்யவேண்டும் என்ற நடைமுறையை ஏற்படுத்தி உள்ளார்கள். அவ்விதம் வீடுறை தெய்வங்களை மறக்காமல் வழிபட்டுவரும் நகரத்தார்கள் மேன்மேலும் வாழ்க்கையில் சிறப்படைந்து வருவது நாம் கண்கூடாக காணும் ஒருகாட்சியாகும்.

ஐயா, நாஸ்திக நம் இன நண்பர்களே! உங்கள் கொள்கை என்ன ? ஜாதி மதவித்தியாசம் கூடாது. எல்லோரும் சமம். ஏற்றத்தாழ்வு கூடாது என்ற கம்யூனிச தத்துவத்தைத்தானே கூறுகிறீர்கள். ஒரு செயலில் நிபுணத்துவம் பெறுவதற்கு முன்பு பயிற்சி வேண்டும். முதலில் நம்பிக்கை இல்லாமல்தான் பயிற்சிகளில் கலந்துகொண்டு தேர்வு பெற்று கலெக்டராகவும், போலீஸ் அதிகாரியாகவும், படைத்தளபதிகளாகவும் ஆகிருர்கள். பயிற்சியில் கலந்துகொண்டவர்கள் எல்லாம் உடனே தேர்வடைவதில்லை. அவ்விதம் அதிகாரிகளாக வேண்டும் என்று குறிக்கோள் உள்ளவர்கள் திரும்ப திரும்ப பலமுறை கலந்துகொண்டு நினைத்ததை அடைகிருர்கள். அவ்விதம் ஒரு பயிற்சியாக ஒரு முறை ஐயப்பன் விரதம் இருந்து பாருங்களேன். கம்யூனிச தத்துவங்களுக்கு மேலாக விஞ்ஞான ரீதியிலும் ஐயப்பன் விரதம் நம் உடலுக்கு நன்மை பயக்கிறது. எனக்கு தெரிந்த காரணங்களை கூறுகிறேன் :

1) ஜாதி மத வித்தியாசமின்றி இந்துக்களும், முஸ்லீம்களும், கிருத்துவர்களும் ஐயப்பன் கோயில் வருகிருர்கள்.

2) ஏற்றத்தாழ்வில்லாமல், ஏழை பணக்காரன் என்ற வித்தியாசமில்லாமல் எல்லாரும் கலர் ஆடை அணிகிருர்கள். ஒருவருக்கு மற்றவர் சாமிதான். ஐயப்பன்தான். மனதில் அகங்காரம் நீங்கி ஒருவர் பாதம் மற்றவர் பணிந்து வணங்குகிருர்கள். எல்லோரும் நடந்தே சென்று, வரிசை வரிசையாகச் சென்று சபரிகிரி சாஸ்தாவை தரிசிக்கிருர்கள்.

3) விரதமிருக்கும் இரண்டு மாதமும் ஐயப்பன் என்ற மந்திரத்தை அடிக்கடி உச்சரித்து மனத்தை அலையவிடாமல் ஒரே இடத்தில் நிலைநிறுத்த முடிகிறது. இந்த மனஉறுதி மற்ற பத்து மாதங்களில் செய்யும் செயல்களில் காட்ட முடிகிறது.

4) விரதமிருக்கும் காலங்களில் காலையிலும் மாலையிலும் இருமுறை குளிப்பதால் உடல் அழுக்கு நீங்குவதுடன் உடல் உஷ்ணமும் குறைகிறது. மிகவும் குளிர்காலங்களான கார்த்திகை, மார்கழி ஆகிய இரு மாதங்களில் குளிர் நீரில் குளித்து உடல் பழகி

விடுவதால் மற்ற மாதங்களில் தண்ணீரால் நம் உடலுக்கு எவ்வித தீங்கும் ஏற்படாது.

5) விரத காலங்களில் காலில் செருப்பில்லாமல் நடப்பதால் நம் சுற்றுப்புற சூழ்நிலையில் புழுதியில் உண்டாகும் நோய்க்கிருமி தாக்குதலை நம் உடல் சமாளித்துக் கொள்கிறது. பின்வரும் மாதங்களில் எவ்வித நோயும் அணுகாது. [இதற்காக சாக்கடைகளிலும், அசிங்கங்களிலும் நடக்கலாம் என்று நான் கூறவில்லை]

6) முக்கியமாக குருவை மதித்து மாலை அணிந்துகொண்டு, இருமுடி கட்டிக்கொண்டு, மாலை கழற்றிக்கொண்டு விரதத்தை முடித்துக்கொள்வதால் பெரியவர்களை மதிக்கவேண்டும் என்ற மனப்பான்மை வளர்கிறது.

7) நமக்கு வேண்டிய உணவை பிறர் தயவில்லாமல் நாமே சுமந்துகொண்டு ஓரிரு தினங்கள் மிருகங்கள் வாழும் வனச் சூழ்நிலையில் இரவும், பகலும் பயமின்றி நடந்து போவதால் நமக்கு வேண்டியவற்றை நாமே தேடவேண்டும் என்ற சுயஉணர்வும், தைரியமும் ஒவ்வொருவருக்கும் ஏற்படுகிறது. எதற்கும் அடுத்தவரைச் சார்ந்திருக்கவேண்டும் என்ற கோழைத்தனம் மறைந்துவிடுகிறது.

8) முன்முடியில் உள்ள நெய் தேங்காய் இறைவனுக்கே. அதனைப் பத்திரமாக இறைவனடிக்கு கொண்டுசேர்க்கவேண்டும் என்று குருசாமி சொல்லிவிடுவதால் அவ்விதமே சாமிகளும் சபரிகிரிசாஸ்தாவின் அபிஷேகத்திற்காக வெகு ஜாக்கிரதை யுடன் கொண்டு செல்கிறார்கள். ஒருவனுக்குரிய பொருளை பத்திரமாக எந்தச் சூழ்நிலையிலும் பாதுகாத்து சேர்ப்பிக்க வேண்டும் என்ற மனஉறுதி ஏற்படுகிறது.

9) சபரிமலை யாத்திரையில் முன்பின் அறியாத சாமிகள் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்வதும், மரியாதையுடன் பயபக்தியுடன் நடந்துகொள்வதும் யாத்திரையில் கலந்துகொண்டால்தான் தெரியும். நம் அரசியல்வாதிகள் அடிக்கடி கூறும் சோஷியல் சமுதாயம் ஐயப்ப பக்தர்களில்தான் உருவாகிறது.

10) இறுதியாக ஒரு முக்கிய காரணம். இதனைச் சொல்லாமல் இருக்கமுடியாது. நம் அரசியல் தாரக மந்திரமான குடும்ப கட்டுப்பாட்டுக் கொள்கை மறைமுகமாக ஐயப்ப பக்தர்களால் கடைபிடிக்கப் படுகிறது. மிகவும் குளிர் காலமான கார்த்திகை, மார்கழி மாதங்களில் விரதம் இருப்பதால் அதுவும் கோடிக்கணக்கான பக்தர்கள் விரதமிருப்பதால் ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தில் ஜனனத்தைக் குறைக்க முடிகிறது. மற்ற மாதங்களிலும் மனதையும், உடலையும் கட்டுப்படுத்த இது பயிற்சி ஆகிறது.

எந்த ஒரு அமைப்பிலும் நல்லவர்களும் இருப்பார்கள். கெட்டவர்களும் இருப்பார்கள். நல்லதும் நடக்கும். கெட்டதும் நடக்கும். ஒருசில மனத்தைக் கட்டுப்படுத்த முடியாத விளையாட்டு மனப்பாண்மையில் சிறுபிள்ளைத்தனமாக மாலையணிந்துகொண்டு விரதத்தைச் சரிவர கடைப்பிடிக்காமல் நடந்து கொள்ளும் ஐயப்ப பக்தர்களை உதாரணத்துக்கு எடுத்துக் கொள்ளாதீர்கள். எதிலும் நல்லதை எடுத்துக் கொள்ளுங்கள். அல்லதை ஒதுக்கிவிடுங்கள். எதிலும் முதலில் ஒரு நம்பிக்கை வேண்டும். ஐயப்ப சக்தி உள்ளது என்று மனதில் நம்பிக்கை கொண்டு ஒருமுறை குருசாமி சொல்கிறபடி விரதம் இருந்து மலை சென்று வாருங்கள். அடுத்த மலை வரும்போது நம்மவரில் ஒரு நாஸ்திகர் குறைந்துவிட்டார் என்று நான் உறுதியாகக் கூறுவேன்.

சுவாமியே சரணம் ஐயப்பா.

ஆ. வீர.வி.சிவ.கி. சிவசுப்பிரமணியன் B.SC., BL.
அட்வகேட், சிவகங்கை.

# தேசிக விநாயகனைத் தொழுவோம்



எண்ணுவ முடிதல் வேண்டும்

ஏற்றமாய் இன்பம் பொங்கி

நண்ணுவ சிறக்க வேண்டும்

நலமெலாம் நிறைய வேண்டும்

மண்ணினில் துன்பம் நீங்கி

மன்பதை சிறக்க நாளும்

கண்ணினை ஒத்த காவல்

கணபதி தொழுவம் நாமே.

பிள்ளையார் அருளே வேண்டும்

பிணியெலாம் நீங்கி என்றும்

கிள்ளைபோல் பேசல் வேண்டும்

கீழ்நிலை மாற வேண்டும்

கொள்ளையாய் இன்பம் சூழ்ந்து

குவலயம் நன்கு வாழத்

தீர்த்தார் குளத்து தேசிக

விநாயகனைத் தொழுவம் நாமே.

கவிஞர். அரு. சுந்தரம், M.A., B.Ed.,

தலைமையாசிரியர், ச. இராம. மே. நி. பள்ளி,

நாட்டரசன்கோட்டை.

உ

சிவமயம்

# தேசிக விநாயகர் திருக்குறள் பதிகம்

**இயற்றியவர் :** பலவான்குடிப் புலவர். பாவலன்மணி பாடுவார், **வெ. வெ. வெ. வேலப்பசெட்டியார்,** எம்.ஏ., (தமிழ்), எம். ஏ., (ஆங்கிலம்), பி.ஓ.எல்., பி.லிட்., பி.டி., ரா.பா. (இந்தி)
**வேப்பங்குளம் - 623 305.**

தேசிக விநாயகர் திருக்குறள் பாஅதிகம்
பேசிவரக் காப்பாய் பெரிது. 1

பெரிதாக அன்னையாம் கண்ணாத்தாள் போற்றும்
அரிதாம் விநாயகனே வா! 2

வா என்றேன் வாராய் வரமெல்லாம் நல்லபடி
தா என்றேன் தாராய் தழைத்து. 3

தழைத்து வரும் ஆலாய் விழுதாய் நற்செல்வம்
பிழைத்துவரச் செய்வாய் பிறந்து. 4

பிறந்த நன்மக்கள் மனைவி என் தாயார்
சிறந்துயரக் காப்பாய் தினம். 5

தினம் வேண்டும் என்பாய் பதினாறு பேறும்
மனம்போலத் தாராய் மகிழ்ந்து. 6

மகிழ்ந்து மகிழ்வித்துச் செந்தமிழ் அந்தாதி
புகழ்ந்துவரக் காப்பாய் பொலிந்து. 7

பொலிந்தமுப் பாலாய் அறம் பொருள்வீட்டின்பம்
மலிந்துபெறச் செய்வாய் மலர்ந்து! 8

மலர்ந்து மணக்கின்ற பூவாய் என்பாவும்
புலர்ந்திடச் செய்வாய் புரிந்து. 9

புரிந்துலகம் எல்லாம் மழையாய் ஒளியாய்
விரிந்துவாழ வைப்பாய் தேர்ந்து. 10



# தீர்த்தக் குளத்துத் தேசிக விநாயகர்

## படர்க்கை

தீர்த்தக் குளத்துத் தேசிக விநாயகனின்
ஆர்த்த திருவடிகள் அகங்குளிரச் சிந்தித்து
வந்திப்பார் செய்த வல்வினைகள் யாவும்
முந்தை வினையோடு முடிந்தொழிதல் திண்ணமாம் 1

தென்பாண்டி நாட்டுத் தென்பனைசை நகரதனில்
அன்போடு கீழ்த்திசையில் அமர்ந்துள்ள விநாயகனின்
கண்பார்வை பட்டவர்கள் கருமவினை யொழிந்து
பண்பான வாழ்வுற்றுப் பாரதனில் வாழ்ந்திடுவர் 2

நாட்டரசன் கோட்டையெனும் நன்னகரின் எல்லையிலே
பாட்டரசன் கம்பனவன் பாயல்கொள் திசைநோக்கி
வீற்றிருக்கும் விநாயகனின் வெல்கழல்கள் விரும்புவார்
கூற்றுவனைக் கண்டிடினும் குலைநடுங்க மாட்டாரே. 3

## முன்னிலை

ஆனைமுகம் கொண்டதுவும் அசுரபலம் நல்குதற்கோ
பானைவயிறு பெற்றதுவும் பணிவுடைமை பெறுதற்கோ
மோதகம் கையுடைமை மோட்சம் காட்டுதற்கோ
மாதேவன் புதுமையுரு மண்ணவர்க்குக் காட்டினாய். 4

தாதையிடம் பழம்பெறத் தம்பி பழநியாயினான்
மாதுவள்ளி பழநியை மணம்புரர ஆக்கினாய்
துறவறத்தில் துரத்தியும் இல்லறத்தில் இருத்தியும்
அறமிரண்டும் காட்டிய அற்புதத்தை என்னென்பேன். 5

வியாச மாமுனி விளம்பிய பாரதத்தை
நேசமுடன் கொம்பொடித்து நீட்டோலை மேருவிலே
வையம் பயனுறவே வடித்துவைத்த தொண்டால்
ஐயமின்றிப் பாரதம் அருட்டன்மை பெற்றதுவே. 6

முருகனுக்கு முன்பிறந்தும் முத்தமிழ் நாட்டாரால்
உருவறியா திருந்தவுன் திருமேனி தன்னைச்
சிறுத்தொண்டப் பேராளர் செந்தமிழ்- நாட்டார்க்கு
உருத்துக் கொணர்ந்து உருவம் காட்டினீரே. 7

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழைமையினன்
பின்னைத் தமிழகத்தில் பேர்பெற்ற போதினிலும்
தெய்வங்கள் பலருக்கும் தேசிகனாய் முன்வந்து
ஐயமின்றி முதல்வனாய் ஆனதுன் சீரன்றோ. 8

## படர்க்கை

பிள்ளையார் சுழியின்றிப் பிறசெயல்கள் பிறங்காவாம்
பிள்ளையார் துணையின்றிப் பெருஞ்செயல்கள் முடியாவாம்
பிள்ளையார் அருளின்றிப் பெருவாழ்வு கிட்டாதாம்
பிள்ளையார் எண்ணமின்றிப் பிறவிகள் ஒழியாவாம். 9

தீர்த்தக் குளத்துத் தேசிக விநாயகனின்
பார்வைக்கு உள்ளாகிப் பற்றுள்ள பனைசைநகர்
நகரத்தார் நாட்டார் நன்மைகள் பலபெற்று
இகமும் பரமும் இனிதே வாழ்க. 10

வித்துவான், புலவர்,
கரு. சிவ. க. செரக்கலிங்கம் M.A., B.ED.



உ

கணபதி துணை

## நாட்டரசன்கோட்டை
## தேசிக விநாயகர்

# பஞ்ச ரத்னம்.



### அறுசீரடி விருத்தம்.

திருவளருந் தனதருள்வா ரிதியினின்று மன்பாய
திகற்சூற் கொண்டு
கருதுமன்பர் சலனவினை வெயிற்கோடை தணியவின்பக்
கலாப மாடப்
பொருவிலுயர் சிவஞானப் பயிர்தழையக் குணவரையிற்
பொருந்தி நாளுங்
கருணைமத மழைபொழியுந் தேசிவிநா யகமுகிலைக்
கருத்துள் வைப்பாம் (1)

சுருதிநூல் பரவுந்த னன்பரெனு முடுக்குலங்கள்
சூழ்ந்து மாயை
யிருளொழியச் செழியகர கமலமலர் குவிப்பமன
வெழிற்செங் காந்தள்
முருகுயிர்ப்பப் புகழதனை வியந்துரைக்குஞ் செவ்வாய்க்கு
முதம்வாய் விள்ள
வருளுறுந்துந் தேசிவிநா யகமதியை யெந்நாளு
மகத்துள் வைப்பாம். (2)

வருமகலா வகங்கார விருள்விடிய மோகமெனும்
வாடை நீங்க
மருள்செய்பல வினையாய நாண்மீனு மறுமதியு
மழுங்க லெய்தப்

## தேசி விநாயகர் பஞ்ச ரத்னம்.

பருவமுள மெய்யடிய ரிதயகம லம்பூப்பப்
பணிக்கும் வண்மை
பெருகுமுயர் தேசிவிநா யகப்பரிதி யைப்பணிந்து
பெரிது வாழ்வாம். (3)

கருவமிலா நற்குணங்க ளெனும்பொருள்சே ருயர்ஞானக்
கலத்தை யூர்ந்தே
யருமறைசொ னன்னெறியிற் சேர்வார்க்குக் கதியிடத்தை
யன்பாற் காட்டித்
தெருணிலவு சுகுணமணி தழுவியின்ப வளத்தமுதந்
திகழ நல்கும்
மருவுபுகழ்த் தேசிவிநா யகக்கருணை வாரிதியை
மனத்துள் வைப்பாம். (4)

ஒருவுதலி லன்பர்மன வகலிடத்தி லுற்றிசையா
லுயர்ந்து நன்மை
தருமுரிமை யெனுங்கனக மணிவிரவிச் சாந்தநறுந்
தருவுற் றின்ப
வருவியெங்கு மருவிமிகு கருணைமுகி றவழப்பெற்
றவிரு மெங்கள்
நிருவிகற்பத் தேசிவிநா யகக்குணமா மலையையென்று
நினைந்து வாழ்வாம். (5)

### வாழி.

நான்மறையு முத்தமிழு நான்குவரு ணத்தவரும்
வான்முகிலு நல்லறமு மண்ணும்விண்ணு — மேன்மைமிகு
தென்பனசை யம்பதிவாழ் தேசிவி நாயகனு
மின்புறுமெ யன்பரும் வாழி.

கும்பகோணம் ''வித்வான்''
திருவாளர். சுப. வெள்ளைவாரணம்பிள்ளை
நூல்வழங்கியவர் :
பேராசிரியர். சுப. இராமநாதன் செட்டியார்

# ஆன்ம தத்துவங்கள் — 96

மண், புனல், அனல், கால், வான் என பூதங்கள் 5

வாய், கால், கை, எருவாய், கருவாய் என கர்மேந்திரியங்கள் 5

பேசல், நடத்தல், கொடுத்தல், விடுத்தல், இன்புறல்
எனக் கர்மேந்திரிய விஷயங்கள் 5

செவி, தோல், கண், நாக்கு, மூக்கு என ஞானேந்திரியங்கள் 5

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என தன் மாத்திரைகள் 5

மனம், புத்தி, சித்தம், அகங்காரம், உள்ளம் என அந்தக்-
கரணங்கள் 5

இடைகலை, பிங்கலை, சுழும்நா, கண்டம், அக்ஷகன் காந்தாரி,
சுத்தி, சுலம்புடை, சங்கினி, குருநாடி என நாடிகள் 10

பிராணன், அபானன், வியானன், சமானன், உதானன் என
வாயுக்கள். 5

நாதன், கூர்மன், க்ருகரன், தேவதத்தன், தனஞ்செயன் என
உபவாயுக்கள் 5

அமலாஸ்ரயம், விபஜனஸ்ரயம், ஜலாஸ்ரயம், மலாஸ்ரயம்,
சுக்லாஸ்ரயம் என ஆஸ்ரயங்கள் 5

ஜாக்ரம், சுவப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என
அவஸ்தைகள் 5

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம்,
ஆனந்தமயம், என கோசங்கள் 5

மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி,
ஆக்னேயம் என ஆதாரங்கள் 6

தாரேஷனை, புத்ரேஷனை, வித்தேஷனை என ஈசனதிரவியங்கள் 3

சாத்விகம், ராஜசம், தாமசம் என குணங்கள் 3

நல்வினை, தீவினை என வினைகள் 2

வாதம், பித்தம், கிலேக்ஷமம் என தோஷங்கள் 3

இராகம், துவேஷம், காமம், குரோதம், லோபம், மோகம், மதம்,
மாச்சர்யம், டம்பம், தர்ப்பம், ஈர்ஷை, அசூயை, அகங்காரம்,
மமகாரம் என துர்க்குணங்கள் 14

தொகுப்பு :- வித்துவான்
நா. சுப்பிரமணியன்

ஒரியண்ட் பிரிண்டர்ஸ், மதுரை. போன் : 35394